# கொலம்பியா
## ரிகார்டுகளில் கேளுங்கள்



ஜூபிடர்ஸ்

# ஸ்ரீ முருகன்

டாக்கி பாட்டுகள்

**U.R. ஜீவரத்தினம்** பாடிய

| | |
|---|---|
| GE. 6342 | GE. 6343 |
| ஸ்ரீ முருகா<br>வாச மலர் | கோலம் கண்டுளீர<br>வேல் முருகன் |
| GE. 6344 | GE. 6345 |
| பராசக்தி<br>தீப்பிடித்த | வீரர்கள்<br>ஆனந்தம் (என் மகன் படத்திலுள்ளது) |




G.H. RAO

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ். 2.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்:

**மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்**

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

## தாமதியாதீர்கள் !



# பிஸ்மாக் BISMAG

## உட்கொள்ளுங்கள் !

நல்ல சாப்பாட்டுக்குப் பிறகு, இன்னும் நீங்கள் வேலைசெய்ய வேண்டி யிருந்தால்— பிஸ்மாக் (பைஸ•ரேடட் மக்னீஷியா) உட் கொள்ளுங்கள். மிகச் சுலபமானதும் அஜீரணம், வயிற்றுப் பொருமல், வயிற்று மந்தம் இன்னும் சகலவித வயிற்றுக் கோளாறுகளுக்கும் இன்றியமையாதது.

போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்! பிஸ்மாக் உட் கொண்டு நல்ல ஜீரண சக்தி அடையுங்கள்.




மாத்திரையாகவும் பௌடராகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

Sole Distributors in India:
Geoffrey Manners & Co., Limited
BOMBAY, CALCUTTA, MADRAS and LAHORE

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள் :
ஜியோப்ரே மானர்ஸ் & கம்பெனி லிமிடெட்
பம்பாய், கல்கத்தா, சென்னை, லாகூர்

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும் போது ஏற்படும் வயிற்றுப் போக்கு முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த நிவாரணி.

குழந்தைக்கு முக்கியமானது
# பேபிகிரைப்
குழந்தைக்கு ஆரோக்கியமளிப்பது

மிகச் சிறந்த
ரத்த சுத்தி மருந்து

இருதிரேகத்தில் உஷ்ணம் அதிகரித்து அதனால் ஏற்படும் ரோகங்களை குணப்படுத்தி, தேகத்திற்கு ஆரோக்கியத்தை கொடுக்கும். ரத்தத்தை சுத்தி செய்து ரத்த விருத்தியையும் உண்டாக்கும்

# அயோடிசால்

IODISAL
The best
BLOOD PURIFIER

முகப்பரு, சேத்துப் புண் சொறி, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்குக் கைகண்ட
— மருந்து —

# சைபால்

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள்:
தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி
மதுரை

ஏஜண்டுகள் :—ராஜன் ட்ரக் ஸ்டோர்ஸ், நைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா; மிர்ஜா பெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி.

# சிறுமிகளுக்கும் பெற்றோர்களுக்கும்!

சிறுமிகளுக்கு—உன்! உன்மிகவும் அழகான பொம்மை தூங்குகிறது. அதைப் பார்த்தால் நிஜக் குழந்தையைப் போலல்லவா இருக்கிறது. ஓ! உன் கைகளைப்பார். அவைகளை லைப்பாய் சோப்பால் சுத்தப்படுத்த வேண்டும். இதுவும் உன் விளையாட்டில் ஒரு பாகந்தான். ஏனென்றால், நிஜமான, பெரிய, சிறிய குழந்தையை ஜாக்கிரதையாக காப்பாற்ற எல்லா வஸ்துக்களையும் கொஞ்சமும் அழுக்கில்லாமல் சுத்தமாக வைத்துக் கொள்வதுதான் முக்கியமென்று பெரியவர்களுக்குத் தெரியும். லைப்பாய் சுத்தம்செய்து கிருமிகளையும், தூசிகளையும் போக்க, ஒருபொழுதும் மறக்காதே. அவ்வாறு நீ செய்தால் உன் தாயாருக்கு மிகவும் ஆறுதல் அளிக்கும். ஆகையால் விளையாட்டை லைப்பாயால் சுத்தம் செய்வதோடு முடி. சாப்பாட்டிற்கு முன்னும் கூட சுத்தம் செய்ய மறக்காதே. "நான் ஏன் லைப்பாய் சோப்பை உபயோகிக்கிறேன்?"

பெற்றோர்களே! உங்கள் குழந்தைகள் வீட்டிலோ, பள்ளிக்கூடங்களிலோ, தெருக்களிலோ, எங்கு விளையாடினாலும், விஷக்கிருமிகள் கொண்ட அழுக்கின் அபாயத்திற்குள்ளாவார்கள் என்று உங்களுக்குத் தெரியும். குறைந்தது 27 வித நோய்களுக்கு அழுக்கும் தூசியும்தான் காரணம் என்று டாக்டர்கள் சொல்லுகிறார்கள். அழுக்கிலுள்ள கிருமிகளை ஒழிக்க மிகவும் சுலபமானதும், சுகமுமான வழி என்னவென்றால் லைப்பாயினால் நன்றாயும், ஒழுங்காயும் சுத்தம் செய்வதுதான்.

என்ற கேள்விக்கு உங்களுக்கு தோன்றும் பதிலை Dept. B212 P.O. Box 758, Bombay, என்ற விலாசத்திற்கு எழுதுங்கள். உன்னத விடைக்கு மாதமொரு முறை ஒரு பரிசு அளிக்கப்படும்.

**லைப்பாய்** ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது. அது ஒரு நல்ல பழக்கம்



ரீடா கேசவளர்ச்சிக்கான ஜீவ சக்தி வாய்ந்த ஓர் ஆகாரம். இது சிரஸை ஆரோக்யமாக வைத்து, வழுக்கை விழுவதைத் தடுத்து, மயிர் உதிர்வதை நிறுத்தி, பால்யத்தில் ஏற்படும் நரையையும் அறவே நிறுத்தி விடுகிறது.



ரீடா கேசத்திற்கு அதன் இயற்கையான சத்துவத்தை மீண்டும் அளித்து, கேசத்திற்குப் பலமளித்து வளர்ச்சி யளிக்க வல்ல பொருள்களை மயிர்க்கால்கள் லகுவில் ஏற்றுக் கொள்ளும் வகையில் ஆர்க்கானிக் ரூபத்தில் சப்ளை செய்து கேச வளர்ச்சியை விருத்தி செய்கிறது.

ரீடா ஆரோக்யமான கேசவளர்ச்சிக்கு இடைஞ்சலாக உள்ள எல்லாவற்றையும் திருத்தி விடுகிறது. ஆயிரக் கணக்கானவர்கள் ரீடா உபயோகித்து அபார நன்மையடைந்துள்ளனர். இன்றே ரீடா உபயோகியுங்கள். இந்தியாவில் எங்கும் கிடைக்கும்.

ஒரு பாட்டில் விலை அணா 15/-




# RITA
## HAIR TONIC

## அழகிய கேசத்தை வளர்க்கிறது

---



## வீட்டில் ஒரு ஹிண்ட் இருப்பது சமய லாபம்

கடைகளுக்கும் மார்க்கெட்டுக்கும் அதி விரைவில் போய் வர வீட்டில் ஒரு ஹிண்ட் ஸைகிள் வைத்துக் கொள்ளுங்கள்.




தயாரிப்போர்கள்: ஹிண்ட் ஸைகிள்ஸ் லிட்.,
சென்னை இராஜதானிக்கு (சுதேச ஸமஸ்தானங்கள் உள்பட)
ஸோல் ஏஜண்டுகள்: டீலக்ஸ் ட்ரேடிங் கோ., பாலக்கரை, திருச்சி
பிராஞ்சு: 11, ப்ராட்வே, சென்னை.

HC. 26—Tam

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 6 }
இதழ் 33 }

1947 மார்ச் 16

{ விய
{ பங்குனி 3



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

வண்டிப் பாதை வசதிகள் அற்ற நவகாளி, திப்பேரா ஜில்லாவைச் சேர்ந்த கிராமங்களில் காந்தி மகான் கால்நடை யாத்திரையை மேற்கொண்டார். கடும்பனி நிறைந்த வயல் வரப்புகளையும் வற்றிப்போன வாய்க்கால்களையும் கால்நடையாகவே கடந்து சென்றார். பிராயம் மிகுந்த காந்தி மகான், இந்தத் தள்ளாத வயதில் இத்தகைய சிரமசாத்தியமான ஒரு யாத்திரையில் ஈடுபட்டுக் கீழ் வங்காளத்தில் அமைதியை நிலைநாட்டினார்.




சமரச ஞானியான காந்தி மகானுடைய சன்மார்க்க போதனையின் காரணமாய் சத்தியமும் அஹிம்சையும் வெற்றி பெற்றது. எனவே, மகாத்மாஜி ஓரளவு நம்பிக்கையுடன் கீழ் வங்காளத்தை விட்டுப் புறப்பட்டு பிஹார் மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் தொடங்கியிருக்கிறார்.

மகாத்மாஜி கீழ் வங்காளத்தில் யாத்திரை செய்தபோது சில மூங்கில் பாலங்களைக் கடக்க நேரிட்டது. பாலங்களைக் கடக்கும்போது காந்திஜி ஒருவருடைய ஒத்தாசையையும் நாடவில்லை. கைக்கோலையும் தொடுவதில்லை. அப்படித் தன்னந் தனியாகவே பாலத்தின்மீது நடந்து செல்வதில் மகாத்மா தனிப் பெரும் மகிழ்ச்சி கொண்டார்.

மகாத்மாவின் மகிழ்ச்சிக்குரிய அத்தகைய ஒரு அபூர்வக் காட்சியையே இந்த இதழ் அட்டைப் படமாக வெளியிட்டு நாமும் மகிழ்ச்சி அடைகிறோம்.

பிசரைத்பூருக்கும் நந்திகிராமத்துக்கும் இடையே உள்ள ஒரு பெரிய பாலத்தையும் மேற்படி பாலத்தின் மத்தியில் மகாத்மா தனித்து நடந்து வரும் காட்சியையும் படத்தில் பார்க்கலாம். அவருடைய கைக்கோல் அவருடைய கையில் இல்லாததையும் கவனிக்கலாம். வாய்க்காலில் தண்ணீர் இல்லாததால் மகாத்மாஜி தலைக்கு மேலே உள்ள பாலத்தை ஏறிக் கடக்க வேண்டிய அவசியமின்றிக் கீழேயுள்ள மூங்கில் பாலத்தின் மீதே நடந்து செல்கிறார்.

போட்டோ: கே. நடராஜன் எம். ஏ.





# என்ன சேதி?

## முக்கிய விஷயம்

**து**ணி உற்பத்தி விஷயத்திலே சென்னை சர்க்கார் அசமந்தமாக இருந்த போதிலும், நம்முடைய இடைக்கால சர்க்காராவது சுறுசுறுப்பாக இருந்து வருவது பாராட்டத் தக்க விஷயம்.

சென்ற வாரம் மத்திய சட்ட சபையில் நடந்த விவாதத்தின்போது தொழில் மந்திரி ராஜாஜி இரண்டு முக்கியமான விஷயங்களைத் தெரிவித்தார். ஒன்று, இதுவரை இந்திய மில்கள் 60 சத விகிதம் சேலைகளையும் வேஷ்டிகளையும் உற்பத்தி செய்து வந்தன; இனிமேல் அவை 75 சத விகிதம் சேலைகளையும் வேஷ்டிகளையும் உற்பத்தி செய்ய வேண்டுமென்று ஜவுளி கண்ட்ரோல் போர்டு தலைவர் உத்தரவிட்டிருக்கிறார் என்பது. ராஜாஜி தெரிவித்த மற்றொரு விஷயம்தான் ரொம்ப ரொம்ப முக்கியமானது. இந்தியாவிலேயே மாதம் ஒன்றுக்கு 40,000 கதிர்களை உற்பத்தி செய்யத்தக்க முறையில் ஒரு தொழிற்சாலை ஆரம்பமாகப் போகிறதாம்.

இந்த இரண்டும் துணிப் பஞ்சத்தால் தவிக்கும் நம்முடைய இந்திய மக்களுக்கு மகிழ்ச்சியை அளிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

## தப்பு இல்லை!

**இ**ந்தோ சீனாவில் உள்ள வியட்-நாம் குடியரசு தன்னுடைய உயிருக்காகப் பிரெஞ்சு ஏகாதிபத்தியத்துடன் போராடிக் கொண்டு வருகிறது.

இந்தச் சமயத்திலே ஒரு ரசமான செய்தி கிடைத்திருக்கிறது. சென்ற ஒரு வருஷ காலத்திற்குள் பிரிட்டன் சுமார் 2 கோடி பவுன் பெறுமானமுள்ள யுத்தத் தளவாடங்களைப் பிரான்ஸுக்குச் சப்ளை செய்திருக்கிறதாம். பிரான்ஸ் அந்த ஆயுதங்களை வைத்துக் கொண்டுதான் இந்தோ சீன மக்களின் சுதந்திரத்தைப் பறிக்கும் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறதாம்!

பேஷ், ஒரு ஏகாதிபத்தியத்துக்கு மற்றொரு ஏகாதிபத்தியம் இந்த உதவியாவது செய்ய வேண்டாமா?

ஆனால், பிரிட்டிஷ்காரர்கள் இதற்குச் சப்பைக் கட்டு கட்டுகிறார்கள். "நாங்கள் என்ன செய்வோம்? ஆங்கிலோ-பிரெஞ்சு ஒப்பந்தத்துக் கிணங்க நாங்கள் பிரான்ஸுக்கு ஆயுதங்களை சப்ளை செய்தோம். அவர்கள் அதை இந்தோ சீனாவில் உபயோகித்தால் அதற்கு நாங்களா பொறுப்பு?" என்கிறார்கள்.

நியாயமான பேச்சு! பாவம், பிரிட்டன் என்ன செய்யும்? உடன்படிக்கை அல்லவா குறுக்கே நிற்கிறது! நாளை மேற்படி உடன்படிக்கைக் கிணங்க, இந்தோ-சீனாவில் போராடுவதற்காகக் கொஞ்சம் பிரிட்டிஷ் துருப்புகளையும் அனுப்ப வேண்டுமென்று பிரான்ஸ் கேட்டாலும், பிரிட்டன் அனுப்பலாம்!

## மூன்றரை வார்த்தை அதிகம்

**இ**ந்தியாவிலே வகுப்பு வாதம் எவ்வளவு கேவலமான நிலைமைக்கு வந்திருக்கிறது என்பதற்குச் சென்ற வாரம் மத்திய சட்ட சபையில் நடந்த ஒரு விவாதத்திலிருந்து நன்றாகத் தெரிந்து கொள்ளலாம்.

வேலை மெனக்கட்டுப்போன இரண்டு மத்திய சட்டசபை அங்கத்தினர்கள் அகில இந்திய ரேடியோ ஒலி பரப்பி வரும் ஹிந்துஸ்தானிப் பேச்சுக்களிலே உருது வார்த்தைகள் எத்தனை இருக்கின்றன? ஹிந்தி வார்த்தைகள் எத்தனை இருக்கின்றன என்பதைக் கணக்குப் போட்டுப் பார்த்தார்கள். ஹிந்தி வார்த்தைகள் 51¾ம் உருது வார்த்தைகள் 48¼ம் இருந்தன. உடனே மத்திய சட்ட சபைக்கு ஓடிவந்து, "ஐயையோ! 3½ ஹிந்தி வார்த்தைகள் அதிகமாக அல்லவா இருக்கின்றன!

"ஆபத்து, ஆபத்து, பெரும் ஆபத்து!" என்று தனி உருதுவிலேயே முக்கால்மணி நேரம் பேசினார் அந்த லீக் அங்கத்தினர்.

ஹிந்தி அங்கத்தினரோ, "இது என்ன அநியாயம்! உருதுவை 8 கோடி பேர் தானே பேசுகிறார்கள்? ஹிந்தியை 22 கோடி மக்கள் அல்லவா பேசுகிறார்கள்? அப்படியிருக்கும்போது நிறைய ஹிந்தி வார்த்தைகளை அல்லவா உபயோகிக்க வேண்டும்?" என்று முக்கால்மணி நேரம் தூய்மையான தனி ஹிந்தியில் பேசினார்.

சர்தார் படேல் அந்த இரண்டு பேருக்கும் நல்ல பதில் அளித்தார். "நீங்கள் இரண்டு பேரும் பேசும் பாஷை யாருக்கும் புரியாது. எல்லோரும் புரியத்தக்க பாஷையில் பேசவேண்டும் என்ற கொள்கையைத் தான் ரேடியோ இலாகா பின்பற்றி வருகிறது. ரேடியோ இலாகா பாமர மக்களுக்காக ஏற்படுத்தப் பட்டதாகும். இலக்கிய விமரிசகர்கள் விவாதம் செய்வதற்காக அதை ஏற்படுத்தவில்லை" என்றார்.

## யாருக்கு எச்சரிக்கை?

அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன், இருந்தாற்போலிருந்து திடீரென்று ருஷ்யா மேலே பாய்ந்திருக்கிறார். ருஷ்யா ஏதாவது ஒரு தேசத்தை ஆக்ரமிக்கத் தொடங்கினால், அமெரிக்கா அதைப் பார்த்துக் கொண்டிராது என்று அவர் எச்சரிக்கை செய்திருக்கிறார்.

ஜனாதிபதி ட்ருமன் ருஷ்யாவைப் பார்த்து எதற்காக இப்படிச் சொல்ல வேண்டுமோ தெரியவில்லை. ருஷ்யா இப்போது எந்த நாட்டையும் கைப்பற்றி யிருப்பதாகவோ, இனிமேல் கைப்பற்றப் போவதாகவோ தெரியவில்லை. ட்ருமன் கொஞ்சம் பின்னாலே திரும்பி, இந்த எச்சரிக்கையை அமெரிக்காவுக்கே செய்திருந்தால் நன்றாயிருக்கும். ஏனெனில், யுத்தத்திற்குப் பிறகு மற்ற நாடுகளுக்குச் சொந்தமான கேந்திர ஸ்தானங்களையும் முக்கிய நிலைகளையும் அமெரிக்காதான் கைப் பற்றி அங்கே பிரமாதமான ராணுவ முஸ்தீப்புகள் செய்து வருகிறது. அது மாத்திரம் அல்ல. இன்று சீனாவிலும் மத்திய கிழக்கு நாடுகளிலும் அமெரிக்காவின் துருப்புகளும் செல்வாக்கும்தான் அதிகமாயிருக்கின்றன. அவை பெயரளவில் தான் சுதந்திர நாடுகளே யொழிய மற்றப்படி பிரிட்டிஷ்-அமெரிக்க ஏகாதிபத்தியத்துக் குட்பட்ட அடிமை நாடுகளேயாகும். நிலைமை அப்படியிருக்கும்போது எச்சரிக்கை யாருக்கு அவசியம்?

# என்ன செய்ய முடியும்?


நீங்கள் ரிக்ஷா இழுப்பதை எஜமானி விரும்ப வில்லை
யாயின், நான் என்ன செய்ய முடியும்?
சென்னை
மாகாணம்
சர்க்கார்
நிர்வாகம்
SHASTRY

# வெள்ளகால் முதலியார்



தமிழ்ப் பாஷை அனேகருக்கு நீண்ட ஆயுளைக் கொடுத்திருக்கிறது என்று சொல்ல இடம் இருக்கிறது. மகா மகோபாத்யாய உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் சதா தமிழுக்கு உழைத்த காரணமாகத் தொண்ணூறு வயசு வாழ்ந்திருந்தார்.

அதேபோல ராவ் சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியாரும் தொண்ணூறு வயசு வாழ்ந்திருந்து சென்ற சனிக்கிழமை 12-10-46 அன்று சிவபதம் அடைந்தார்.

திருநெல்வேலி ஜில்லாவில் இருக்கும் ஸ்ரீவைகுண்டம் வட்டத்திலுள்ள வெள்ளகால் என்ற கிராமத்தில் ஸ்ரீ முதலியார் பிறந்து வளர்ந்தவர். பெரிய பண்ணையார் குடும்பத்தைச் சேர்ந்தவர்.

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜில் கல்வி பயின்று விவசாயக் கலையிலும் கால்நடை வைத்தியக் கலையிலும் பட்டம் பெற்று அந்த இலாக்காக்களில் உத்யோகம் வகித்து வெட்ரினரி டிப்டி சூப்பரிண்டெண்டு பதவியிலிருந்து இருபத்தைந்து வருஷத்துக்கு முன் விலகினர்.

பத்து வயசிலிருந்தே தமிழ் இலக்கியத்தில் ஆசையை வளர்த்து வந்தார். அதற்கு ஏற்றவாறு திருநெல்வேலியில் தமிழ்ப் புலவர்கள் கூட்டம் ஒன்று அச்சமயம் இருந்தது. இளம் பிராயத்திலேயே அந்தக் கூட்டத்தோடு கலந்து கொண்டு அவர்கள் சொல்லும் பாடல்களை அனுபவித்து வந்தார்.

தமிழ் நூல்கள் என்றால் அவர் படியாத நூல் கிடையாது. எவ்வளவு கஷ்டமான நூல் ஆனாலும் பாடல்கள் ஐயாயிரம் பதினாயிரம் என்றிருந்தாலும் அவ்வளவையும் படித்துவைத்து விடுவார். காஞ்சிப் புராணம் தணிகைப் புராணம் இரண்டையும் முழுதும் கற்று ஆராய்ந்தவர் தமிழ் நாட்டில் முதலியாரைத் தவிர்த்து வேறு யாரும் இல்லை.

அறுபது வருஷத்துக்கு முன்பு புலவர் உலகத்தில் சிலேடை பாடுவதைப் பாராட்டி வந்தார்கள். எல்லாப் புலவர்களும் திகைக்கும்படி நெல்லைச் சிலேடை வெண்பா என்னும் நூறு செய்யுள் கொண்ட நூலை அரங்கேற்றினர்.

தமிழுக்கு ஏதாவது தொண்டு செய்ய வேண்டும் என்ற ஆத்திரம் தூண்டிக் கொண்டே இருக்கும் அவரை. அதன் பயனாக மில்டனுடைய 'பாரடைஸ் லாஸ்டு' என்னும் இதிகாசத்தைத் தமிழ்ப் படுத்தினர். கோம்பி விருத்தம் முதலிய செய்யுள் நூல்களும் ஸ்பென்ஸர் எழுதிய கல்வி விளக்கத்தின் தமிழ் வசன நூலும் வெளியாயின. அகலிகை வெண்பா என்னும் பிரபந்தமும் ஒரு முக்கியமான வெளியீடு.

கடைசியாக முதலியார் கம்ப ராமாயணத்திலேயே ஈடு படலானர். கம்ப ராமாயணத்தில் குறிப்பிட வேண்டிய பாடல்களைத் திரட்டி 'கம்ப ராமாயண இன்கவித் திரட்டு' என்ற பெயருடன் விசேஷ உரைகளோடு வெளியிட்டார்.

சென்ற எழுபது வருஷ காலமாகத் தமிழுக்கே தம்மை அர்ப்பணம் பண்ணியிருந்தவர் ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியார்; தமிழ் அன்பர், தமிழ்த் தொண்டர், தமிழ் வீரர், தமிழ் வள்ளல் என்று சொல்லும் புகழுக்கெல்லாம் உரிய பாத்திரமாய் இருந்தார். அவரது எண்பதாவது ஆண்டு விழாவை ஒட்டிக் கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை பத்து வருஷத்துக்கு முன்னால் பாடிய பாடல் இது:—

எண்பதாண் டான
இளைஞனே, இன்னமுதின்
பண்பெலாம் காட்டுதமிழ்ப்
பாவலனே—நண்பனே

வெள்ளக்கால் செல்வனே
வேள்சுப் பிரமணிய
வள்ளலே வாழ்க
மகிழ்ந்து!

என்னும் அந்த அழகான பாடலைக் கேட்டுப் பரவசமாகாதவர் கிடையாது.

இவ்வளவு புகழுக்கும் உரியவராய் விளங்கி வந்த பெரியவரின் அரிய உயிர் இறைவன் அடி சேர்ந்துவிட்டது. தமிழ் நாடும் தமிழும் ஒரு பெருந் துணையை இழந்து நிற்கின்றன.

# நல்ல சேதி!

புதுடில்லியிலிருந்து சென்ற வாரத்தில் இரண்டு நல்ல செய்திகள் வந்தன. அவற்றில் ஒன்றைக் குறித்துத் தலையங்கத்தில் எழுதியிருக்கிறோம். அது நல்ல செய்திதானா என்பதுபற்றிச் சிலருக்குச் சந்தேகம்கூட ஏற்படலாம். ஆனால் மற்றொரு செய்தியோ அசல், ஒன்றாந்தரம், நூற்றுக்கு நூற்றிரண்டு பங்கு நல்ல செய்தியாகும்! அதாவது **தேசீய சர்க்கார்** ஆட்சி நடத்தும் புதுடில்லியிலுள்ள தென்னிந்தியர்கள் நமது தென்னிந்தியாவிலேயே மிகச் சிறந்த கல்வி ஸ்தாபனமாய் விளங்கும் திருச்சி **தேசீய கலாசாலை**க்காக ஒரு நாடகம் நடத்திப் பணம் வசூலித்து அனுப்பப் போகிறார்கள் என்பதுதான். இதற்கு அவர்கள் **"கள்வனின் காதலி!"** என்னும் கல்கியின் கதையைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். எல்லாம் நமது 'சுப்புடு'வின் வேலை! எந்த சுப்புடு என்றால், சிலசமயம் புதுடில்லியிலிருந்து நமக்கு ரஸமான கடிதங்கள் எழுதுகிறாரே, அந்த சுப்புடு தான்! அவருடனும் மேற்படி முயற்சியில் மற்ற நண்பர்களுடனும் புதுடில்லித் தமிழர்கள் எல்லாரும் ஒத்துழைத்து ஒரு நல்ல ஸ்தாபனத்துக்கு உதவிசெய்த புண்ணியத்தைக் கட்டிக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

* * *

இங்கே திருச்சியில் நாளது 20உ ஞாயிற்றுக்கிழமை மேற்படி நேஷனல் காலேஜ் கைங்கரியத்துக்காக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரி, சங்கீதரத்ன சௌடய்யா முதலியவர்களின் பக்க வாத்தியத்துடன் நடைபெறுகிறது. இந்தக் கச்சேரியை நேஷனல் காலேஜ் நிதிக்குப் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்ள வைரவிழாக் காரியதரிசி ஸ்ரீ எல். எல். எஸ். மணி சிறந்த முயற்சிகள் செய்து வருகிறார். அவருடைய முயற்சிகளுக்கு ஆதரவு தந்து ஒத்துழைக்க வேண்டுமென்று திருச்சி ஜில்லா வாசிகளுக்கு நாம் சொல்ல வேண்டியதில்லை; கச்சேரி 20-ந் தேதி என்பதை மட்டும் அவர்களுக்கு ஞாபகப்படுத்தி வைக்கிறோம்.




பாரிஸில் இத்தனை நாள் நடந்த சமாதான மகாநாட்டில் நாலு வல்லரசுகளும் ஓயாமல் சண்டையிட்டன. அடுத்தபடி நியூயார்க்கில் சமாதான மகாநாடு நடக்கப்போகிறதாம்.

# வான சஞ்சாரம்

இசைத்தேனீ

ஆலத்தூர் சகோதரர்கள், குறிப்பிடத்தக்க தாளக்கட்டும், லயவின்யாஸமும் கொண்டு, இருவரும் சேர்ந்து உருப்படிகளையும், மாறி மாறி ஸ்வரப்ரஸ்தாரங்களையும் வழங்குவதில் ஒரு தனிச் சிறப்புண்டு. 14௳ திருச்சியில் நிகழ்ந்த அவர்களின் கச்சேரி அதை நிரூபித்தது. ஆனால் ராகங்களை நல் வடிவங்களாய்ச் சித்திரிப்பதில் போதிய கவனம் செலுத்துகிறார்களா என்ற சந்தேகம் அவர்களுடைய கச்சேரியைக் கேட்கும்போது ஏற்படுகிறது. அன்று பாடிய ஐந்து ராகங்களில் கல்யாணியும் லதாங்கியும் தான் வடுப்படாத உருவங்களாய் வெளிவந்தன. 'சரஸஸாமதான' கிருதி மிகப்பழையது. அதன் ராகமாம் காபிநாராயணி இக்காலம் கேட்பதற் கரிதாய் விட்டதால், அதை ஆலாபனைக்கு எடுத்துக் கொண்டதைப் பாராட்ட வேண்டியதுதான். ஆனால் சில இடங்களில் அது ஸாமா ராகமாக ஒலித்தது. கிருதியில் 'பேத தண்டசதுர' என்றுள்ள 'சதுர'வில் இருக்கும் தீவிர காந்தார ப்ரயோகத்தை நன்கு கவனித்தால் ராகத்தைச் சரியாய்ப் பாடிவிடலாம். ஆனால் ஸரிமாமகாரி என்று அடிக்கடி பிடித்ததில், ஸாதாரண காந்தாரப் பிரயோகங்கள் ராகஸ்வரூபத்துக்கு உகந்தவாறு இல்லாததால், ஸாமா சாயை தட்டியது போலும். பாடகர்கள் காபி நாராயணியைப் பிடில் வாசித்தவரும் காபி யாக்கிவிட்டார்! தர்பார், ஆனந்த பைரவி ராகங்களை, வெறும் ஸ்வரக் கோவைகளாலான உருவங்களாயில்லாது, லக்ஷணநிறையும் கோடுகளாய் அமைத்திருக்கலாம்.

10௳ திருச்சியில் நடந்த கே. ஸாவித்ரி அம்மாளின் கோட்டு வாத்யக் கச்சேரி ரஞ்சகமாயிருந்தது. சுருதி சுத்தமும் கமகப் பொழிவும் கொண்டு பல ராகங்களையும் உருப்படிகளையும் வாசித்தார். ஜகன்மோஹினி, பூர்வி கல்யாணி, சங்கராபரணம் ராகங்கள் கவனத்தைக் கவர்ந்தன. உருப்படி ஸ்வரப்ரஸ்தாரங்கள் தரமாயிருந்தன.

13௳ திருச்சியில் பாடிய மன்னார்குடி ராஜகோபால பிள்ளை நல்ல அனுபவம் வாய்ந்த வித்வான். அன்றைய தினம், அவரது தொண்டை சிறிது சிரமம் கொடுத்த போதிலும், கச்சேரியை நன்கு சமாளித்தார். சங்கராபரணம், கல்யாணி ராகங்களும் உருப்படிகளும் ஆழ்ந்த ஞானத்தை விளக்கின.

* * *

வழக்கமான சென்னை திருச்சி சஞ்சாரங்களிலிருந்து டில்லியிலிருக்கும் நமது சகோதரர்களையும் கொஞ்சம் கவனிக்கலாமென்று 8௳ ரிஸீவரைத் திருப்பினேன். எதிர்பார்த்ததற்கு மேலான பலன் கிடைத்தது. அன்று டில்லி தென்னிந்திய ஒலிபரப்பில், கே. ஜி. அப்புசாமியின் கானம் காதை நிரப்பியது. நடுத்தர சாரீரம், நல்ல உதவுபடி. ரீதிகௌளை ராகமும் 'ஜனனி' கிருதியும் தெளிவு கொண்ட சொரூபங்களாய் விளங்கின.

11௳ திருச்சியில் வி. பி. ராஜேஸ்வரி, சென்னையில் ருக்மிணி வாசுதேவன் இவர்களின் கானங்கள் சிறப்பாயிருந்தன. முன்னவர், இனிய குரலில், பிர்க்காப் பொழிவும் நாவாக்கு வழியும் கொண்டு பாடிய காம்போதி, யதுகுலகாம்போதி ராகங்களும் உருப்படிகளும் கவனத்தைக் கவர்ந்தன. ருக்மிணி வாஸுதேவனுக்கு நடுத்தரக்குரல், சாமான உதவுபடி. பாடியதெல்லாம் குறிப்பிடத்தக்க தெளிவுகொண்டு வனப்பு வடிவங்களாய் விளங்கின. கமாஸ், இறுதி ராகமாலிகை இவைகளோடு மந்தாரியை விஸ்தாரமாயும் வடுப்படாமலும் வழங்கினார்.

13௳ சென்னையில் மருத்துவக்குடி ராஜகோபாலய்யர், ஞானச்சிறப்பும் அபூர்வ கற்பனையும் கொண்ட சங்கீதத்தை ஒரு மணி நேரம் பொழிந்தார். கல்யாணி அழகு சஞ்சாரக் கோவை நிரம்பியதாக இலங்கிற்று. காபி வெகு ருசியாயிருந்தது. ராகமாலிகை உருக்கமாயிருந்தது.

அன்று திருச்சியிலிருந்து காலையிலும் மாலையிலும் இரு பாகமாக ஒரு அபூர்வ கானம் கேட்டது. இனிய சன்னக்குரலில் வியக்கத்தக்க தேர்ச்சியோடு தோடி, சங்கராபரண ராகங்கள் சரமாரியாய்ப் பொழிந்தன. உருப்படிகளின் நிரவல் ஸ்வரங்கள் கலகலத்திருந்தன. பாடியவர் சி. நாராமணி ஸ்ரீனிவாஸன்.

14௳ சென்னையில் கசேந்திரம் ஜி. கோபதி, மணக்கால் எஸ். நடராஜன் இவர்களின் கச்சேரிகள் உயர்ந்த ரகமாயிருந்தன. முன்னவருக்குச் சக்திவாய்ந்த குரல். பைரவி, ஷண்முகப்ரியா ராகங்கள் மனதை உருக்கின. மணக்கால் நடராஜனின் சங்கீதப் பிர்க்கா வகைகளைச் சேரவிச்சே என்றும், என்னை தப்பமாட்டார்கள்! ஆம்! அன்று ரேஷன் பிர்க்காக்கூட இல்லாமல், சங்கராபரணம், எதுகுலகாம்போதி, காமன் ராகங்களையும் உருப்படிகளையும் இழைந்திழைந்தே பாடினார்!

அன்று டில்லியிலிருந்து மாலையில் கேட்ட கே. கிருஷ்ணமூர்த்தியின் கானம் நயசாரீரத்தில் சுருதி சுத்தமும் கலையழகும் கொண்டிருந்தது. கேதாரகௌளையும், த்விஜாவந்தியும் பாவம் பொழிவாயிருந்தன. மத்யமகால வேகமே உயர்ந்த சங்கீதமாகக் கருதப்படும் இக்காலத்தில், அதற்கு விலக்காக, ராக பாவம் புஷ்டியுடன், விளம்ப காலத்தில் சாங்கோபாங்கமாய், 'ஜுஜுதாம', 'கல்லோ உனது நெஞ்சம்' என்ற உருப்படிகளை வழங்கியது விசேஷ திருப்தியளித்தது.

# கனவு நனவாயிற்று!

"பகீரதன்"

இந்த மாதம் ஆறுந்தேதி அதிகாலையில் சென்னை தியாகராஜ நகரிலிருந்து ஏழுரை மோட்டார் வண்டிகள் மேற்கு நோக்கிப் புறப்பட்டன. ('ஜீப்' என்று சொல்லப்படும் புதுவித இராணுவ மோட்டாரை 'அரை' வண்டி என்று கணக்கிட்டிருக்கிறேன். வண்டி அரை வண்டியானாலும் அதில் உட்கார்ந்திருந்தவர்கள் ஏழுபேர்!) எல்லா வண்டிகளும் சென்னையிலிருந்து சுமார் நாற்பது மைல் தூரத்தில் பாலாற்றங் கரையில் உள்ள வாலாஜாபாத்தை நோக்கிச் சென்றன. அன்று சென்னை நகரமே கொஞ்சம் வெறிச் சென்றுதான் இருந்திருக்க வேண்டும்!

"சுதந்திரா" பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீ காலா சுப்பராவ்; ஆசிரியர் கல்கி; தமிழ் "ஹரிஜன்" ஆசிரியர் ஸ்ரீ திரிகூட சுந்தரம் பிள்ளை; ட்ரோஜன் கம்பெனி ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார்; தமிழ்ப் பண்ணை ஸ்ரீ சின்ன அண்ணாமலை; ஸ்ரீமதி ராஜம் பாரதி; ஸ்ரீ ரகுராஜ பாரதி; ஹிந்தி பிரசார சபை சத்தியநாராயணா; ஜயபாரதம் கம்பெனி ஸ்ரீ டபிள்யூ. பி. இக்னேஷியஸ்; சென்னை நகரசபைக் கல்வி அதிகாரி ஸ்ரீ சங்கரன்; இந்திய ஜூனியர் சங்கத்து ஸ்ரீ கே. எஸ். வெங்கட்ராமன்; அடியேன் இத்தனை பேருமாகச் சேர்ந்து நகரை விட்டுக் கிளம்பி விட்டால் சென்னைப் பட்டணம் வெறிச் சென்றிராமல் பின் எப்படி இருந்திருக்கும்?

காலை எட்டுமணி சுமாருக்கு வாலாஜாபாத் எல்லைக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கே போய்ச் சேரும் வரையில் வாலாஜாபாத் என்பது ஒரு பட்டணமோ, கிராமமோ என்றுதான் எண்ணியிருந்தேன். எல்லையை அடைந்ததும் அது ஒரு இராஜ்யம் என்று தெரிந்தது! வந்தவர்கள் எல்லாரும் ஒருமுறை தங்களைத் தாங்களே ஏற இறங்கப் பார்த்துவிட்டுக் கம்பீரமாக நிமிர்ந்து நிற்க ஆரம்பித்தோம். பத்து மந்திரிமார்கள் மலர் மாலைகளுடனும் மற்ற மரியாதைகளுடனும் எங்களை வரவேற்பதற்குக் காத்திருந்தால் நாங்கள் வேறு என்னதான் செய்ய முடியும்?

மேற்படி பத்து மந்திரிமார்களையும் வாலாஜாபாத் இராஜ்யத்தின் முடிசூடா அரசர் ஸ்ரீ மாசிலாமணி முதலியார் எங்களுக்கு அறிமுகப் படுத்தினார். "இவர் பிரதம மந்திரி; இவர் ஒழுக்க மந்திரி; இவர் கல்வி மந்திரி; இவர் நலத்துறை மந்திரி அதாவது வைத்திய மந்திரி; இவர் உடற்பயிற்சி மந்திரி; இவர் கருவூல மந்திரி அதாவது பொக்கிஷ மந்திரி; வேளாண்மை மந்திரி; உணவு மந்திரி; விளம்பர மந்திரி; சட்ட மந்திரி" என்று வரிசைக்கிரமமாக அறிமுகம் செய்து வைத்தார்.

முதலில் ஒரே வியப்பிலும் பிரமிப்பிலும் மூழ்கிப்போன நாங்கள் விஷயம் தெரிந்ததும் ஒருவாறு தேறித் தெளிந்தோம். வாலாஜாபாத் இந்துமத பாடசாலையிலுள்ள 700 மாணவர்கள் தங்களுக்குள்ளே நூறு உறுப்பினர்களும் பத்து மந்திரிகளும் கொண்ட ஆட்சி மன்றத்தைத் தேர்ந்தெடுத்து அமைத்திருக்கிறார்கள் என்றும், அவர்களால் இராஜ்யத்தின் நிர்வாகம் ஒழுங்காக நடைபெற்று வருகிறதென்றும் அறிந்தோம்.

★

இந்துமத பாடசாலையைச் சேர்ந்த வள்ளலார் மாணவர் இல்லத்தை அடைந்ததும் உணவு மந்திரியின் நிர்வாகத் திறமையை நாங்கள் நன்கு அறிய முடிந்தது. காலைச் சிற்றுண்டி சிற்றுண்டியாக இராமல் இட்டிலி, பொங்கல், வடை என்று பேருண்டியாகவே திகழ்ந்தது! அதைச் சாப்பிட்டவுடனேயே வந்திருந்த அதிதிகள் உணவு மந்திரியை வாயாரவும் வயிறாரவும் வாழ்த்த ஆரம்பித்து விட்டார்கள்! ஆனால் காப்பியில் வெள்ளைச் சர்க்கரைக்குப் பதிலாக வெல்லம் போடப்பட்டிருக்கிறது என்று தெரிந்ததும் விருந்தினரில் சிலர் முணுமுணுத்தார்கள். இதற்குச் சர்க்கரைப் பஞ்சம் காரணமல்ல வென்றும், உடல் நல மந்திரியின் உத்தரவுதான் காரணம் என்றும் தெரிந்தது!

பாலாற்றங்கரையிலே பசுமையான மரங்கள் நிறைந்த சோலையின் மத்தியிலே



"கைத்தறியின் தெய்வது இப்படித்தான்!"

வைத்தியர் மட்டும் மருந்துப் புட்டிகளுக்குக் காவலாக உட்கார்ந்திருந்தார்!

பிறகு, திருவிழாப் பந்தலுக்கு அழைத்துச் செல்லப் பட்டோம். மாணவர் இல்லத்தின் மராமத்து மந்திரி அந்தச் சோலையின் ஒரு பக்கத்தில் அழகிய பந்தலொன்றும் அதில் பிரசங்க மேடையும் அமைத்திருந்தார். அந்தப் பந்தலில் "சுதந்திரா" பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீ காஸா சுப்பராவ் அவர்களின் தலைமையில் திருவிழா ஆரம்பமாயிற்று.

என்ன திருவிழா என்பதைச் சொல்ல மறந்து விட்டேனே? ட்ரோஜன் கம்பெனி ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார் ஆறு வால்வு உள்ள ரேடியோப் பெட்டி ஒன்றை மேற்படி வாலாஜாபாத் இந்து மத பாடசாலைக்குப் பரிசாக வழங்கியிருந்தார். அந்தப் புதிய வானொலிப் பெட்டியைக் "கல்கி" ஆசிரியர் திறந்து வைக்கும் திருவிழாதான் இவ்வளவு கோலாகலமாக நடைபெற்றது.

இந்துமத பாடசாலையின் விசாலமான ஆனால் எளிமையான ஓட்டு வில்லைக் கட்டிடங்களும், கூரைக் கட்டிடங்களும், மாணவர் இல்லமும், வள்ளுவர் தொழிற்சாலையும், தேரையர் வைத்தியசாலையும், விருந்தினர் விடுதியும் அழகு பெற்று விளங்குகின்றன. இயற்கையான எளிமை வாழ்வு நடத்துவதற்குத் தகுந்தபடி எல்லாம் அமைந்திருக்கின்றன.

பாலாற்றின் வெண் மணற்பரப்பும், பறவைகளின் இனிய கீதமும், தவழ்ந்து வரும் இளங் காற்றும் நகர வாசிகள் கண்டறியாத குதூகலத்தை அளித்துக் கொண்டிருந்தன.

முதலில் திருவள்ளுவர் தொழிற்சாலைக்கு எங்களை அழைத்துச் சென்றார்கள். அங்கே மாணவர்கள் உற்சாகத்துடனும் சுறுசுறுப்புடனும் பலவிதமான வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். நூல் நூற்றல், நெய்தல், தையல் வேலை முதலியவை நடைபெற்றன. ஒன்றுக்கும் உதவாது என்று ஒதுக்கித் தள்ளப்படும் எருமை மாட்டின் கொம்புகளைக் கொண்டு அழகான கொக்குகளையும், கிளிகளையும், மயில்களையும், தலைவாரும் சீப்புகளையும் செய்து கொண்டிருந்தார்கள். புஸ்தகம் பைண்டு செய்தல், கயிறு திரித்தல், சுவர்ப் பூசுதல், காகிதம் செய்தல், பொத்தான் செய்தல் முதலிய வாழ்க்கைக்கு வேண்டிய அவசியமான தொழில்களை வேறு சில மாணுக்கர்கள் செய்து கொண்டிருந்தனர்.

பின்னர் அருகில் உள்ள தேரையர் மருத்துவசாலையைப் பார்வையிட்டோம். வைத்திய வசதிகள் இருந்தனவே ஒழிய ஒரு வியாதியஸ்தரைக்கூடக் காணோம்!

★

விழாவிற்கு வந்திருந்த விருந்தினர் எல்லாரையும் வரவேற்று ட்ரோஜன் ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார் பேசினார். மூன்று வருஷத்துக்கு முன்னால் ஒரு கலியாணத்துக்குப் போயிருந்த இடத்தில், உல்லாசப் பிரயாணம் செய்து கொண்டு வந்த இந்தப் பாடசாலை மாணுக்கர்கள் தேகப் பயிற்சி விளையாட்டுகள் நடத்தியதைத் தாம் பார்த்ததாயும், அது முதல் இந்தப் பள்ளிக்கூடத்தில் சிரத்தை கொண்டதாயும் குறிப்பிட்டு மேலும் சொன்னார்: "ஒரு வருஷத்துக்கு முன் நாமக்கல் கவிஞருடன் நானும் தமிழ்ப்பண்ணை சின்ன அண்ணாமலையும் இங்கே வந்திருந்தோம். சின்ன அண்ணாமலை பிரசங்கமாரி பொழிந்தார். வருண பகவான் போட்டி போட்டுக் கொண்டு அசல் மழையையே பொழிந்து விட்டார். அருகில் உள்ள கட்டிடத்திற்குச் சென்று கூட்டத்தை நடத்தினோம். அந்த பயம் இப்பொழுது இல்லாமல் முன் ஜாக்கிரதையுடன் இந்த விழாவுக்குப் பந்தல் அமைத்த மராமத்து மந்திரியை வாழ்த்த வேண்டும். நீங்கள் எல்லாரும் இந்த அருமையான ஸ்தாபனத்தைப் பார்த்து மகிழ

அந்தக் காந்தி குல்லாக்காரர்களின் அருகில் நெருங்கவே முதலில் கிராமத்தார் தயங்கினார்கள். அவரவர்கள் தத்தம் வீட்டு வாசலிலிருந்தே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் கதர்க் குல்லா ஆசாமிகள் அவர்களை விடுகிற வழியாயில்லை. கிராமத்துக்குள்ளே அவர்கள் வந்து, "மணியக்காரர் வீடு எது?" என்று விசாரித்ததும், கிராமத்தாருக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. காந்தி குல்லாக்காரர்களின் அருகில் நெருங்கி அவர்கள் யார், எதற்கு வந்திருக்கிறார்கள் என்று விசாரிக்க ஆரம்பித்தார்கள். அதற்குப் பதிலாகக் காந்தி குல்லாக்காரர்கள் சொன்ன சமாசாரம் அவர்களை ஒரேயடியாகப் பிரமிக்கச் செய்து விட்டது. வெள்ளைக்கார சர்க்கார் தோற்றுப் போய்க் காங்கிரஸிடம் இராஜ்யத்தை ஒப்புவித்து விட்டார்கள் என்றும், அந்த ஜில்லாவுக்கு மேலதிகாரிகளாகத் தங்களைக் காங்கிரஸ் நியமித்திருக்கிறதென்றும், கலெக்டர்கள் தாசில்தார்கள் எல்லாரும் இனிமேல் தங்கள் கட்டளைப்படிதான் நடக்க வேண்டும் என்றும் அவர்கள் சொன்னார்கள். இதையெல்லாம் அதிசயத்தோடு கேட்டுக் கொண்டே ஜனக் கூட்டம் காந்தி குல்லாக்காரர்களைப் பின் தொடர்ந்து மணியக்காரரின் வீட்டு வாசலை அடைந்தது.

அப்போதுதான் கரும்புத் தோட்டத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த மணியக்காரரும் முதலில் சிறிது திகைத்துப் போனார். என்ன, ஏது என்று விசாரித்தார். விஷயத்தைக் கேட்டதும் அவருக்கு நம்பிக்கைப் படவில்லை. "சரிதான்; என்னிடம் எதற்காக வந்தீர்கள்? ஏதாவது காரியம் உண்டா?" என்று கொஞ்சம் அலட்சியமாகவே கேட்டார்.

"காரியம் இருக்கிறது. இல்லாமலா உங்களிடம் வருவோம்? 'சுயராஜ்யம் வந்து விட்டது; இனிமேல் காங்கிரஸ் சர்க்கார்தான் அரசாங்கம் நடத்துவார்கள்' என்பதாகச் சுற்று வட்டத்துக் கிராமங்களிலெல்லாம் தண்டோராப் போட வேண்டும். தலையாரியை உடனே கூப்பிட்டு விடுங்கள்!" என்று வந்தவர்களில் ஒருவர் சொன்னார்.

மணியக்காரர் தமது அவநம்பிக்கை நன்கு வெளிப்படும்படியாக, "அதெல்லாம் என்னால் முடியாது. மேலாவிலிருந்து எனக்குத் தகவல் ஒன்றும் வரவில்லை!" என்றார்.

அதைக் கேட்ட கதர்க் குல்லாக்காரர்கள் சிரித்தார்கள்.

"இப்போது இப்படித்தான் சொல்வீர்! சற்று நேரம் போனால் வேறு பாடம் படிப்பீர்!" என்றார் அவர்களில் ஒருவர்.

இவ்விதம் பேசிக் கொண்டிருக்கையிலேயே இரண்டு போலீஸ் ஜவான்கள் அங்கு வந்து நின்று மேற்படி காந்தி குல்லாக்காரர்களுக்கு ஸலாம் வைத்தார்கள். "எஜமான்! கலெக்டர் கடிதம் கொடுத்திருக்கிறார்!" என்றார் ஜவான்களில் ஒருவர். அதை வாங்கிக் கொண்ட கதர்க் குல்லாக்காரர் கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு, "சரி; நீங்கள் போகலாம்!" என்றதும், போலீஸ் ஜவான்கள் மறுபடியும் ஒரு பெரிய ஸலாம் வைத்துவிட்டுப் போனார்கள்.

இதைப் பார்த்த பிறகு சோலைமலைக் கிராம ஜனங்களுக்கும் மணியக்காரருக்கும் கூட நம்பிக்கை பிறந்து விட்டது.

"அதற்கென்ன, தண்டோரா போடச் சொன்னால் போகிறது!" என்றார் மணியக்காரர்.

"உடனே தலையாரியைக் கூப்பிட்டு அனுப்புங்கள். தண்டோரா போடும்போது இன்னொரு விஷயமும் சேர்த்துச் சொல்ல வேண்டும். புரட்சி வீரர் குமாரலிங்கத் தேவர் இந்தப் பக்கத்துக் காடுகளில் எங்கேயோ மறைந்திருப்பதாகத் தெரிகிறது. அவரை உடனே கண்டு பிடித்துப் புது டில்லிக்கு அனுப்பி வைக்கும்படி தலைவர் ஜவாஹர்லால்நேருவிடமிருந்து கட்டளை வந்திருக்கிறது. குமாரலிங்கத் தேவர் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்துச் சொல்லுகிறவர்களுக்கு ஆயிரம் ரூபாய் காங்கிரஸ் சர்க்கார்




இனும் கொடுப்பார்கள் என்பதையும் சேர்த்துத் தண்டோராப் போடச் செய்ய வேண்டும்!" என்று ஒரு காந்திக் குல்லாக்காரர் சொன்னார்.

**வா**சல் திண்ணையில் நடந்த இந்தப் பேச்சையெல்லாம் விட்டு நடையில் கதவோரமாக நின்று கேட்டுக் கொண்டிருந்த பொன்னம்மாளுக்கு அப்போது எப்படியிருந்திருக்கும் என்று நேயர்களே ஊகித்துக்கொள்ளலாம். உடனே வாசற்புறம் ஓடிப்போய்க் குமாரலிங்கத் தேவர் இருக்குமிடத்தைச் சொல்லி விடலாமா என்று அவள் உள்ளம் துடிதுடித்தது. ஆனால் பெண்மைக்குரிய அடக்கமும் பெரிய குலத்துப் பண்பும் அவ்விதம் செய்ய முடியாமல் அவளைத் தடைசெய்தன.

பொன்னம்மாளின் தந்தை சிறிது நேரத்துக் கெல்லாம் வீட்டுக்குள்ளே வந்தார். பொன்னம்மாளும் விரைந்து உள்ளே போய் விட்டுக் கூடத்தின் தூணைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

"பார்த்தாயா, பொன்னம்மா! கடைசியில் நான் சொன்னபடிதான் ஆச்சு! அந்த வெள்ளைக்காரப் பயமவனுகள் கடைசியிலே காங்கிரஸ்காரன் காலிலே விழுந்துட்டானுக! மொத்தத்திலே, மானம் ரோசம் இல்லாதவனுங்க! நான் மட்டும் இங்கிலீஷ்காரனாயிருந்தால், என்ன ஆனாலும் ஆவட்டும் என்று கடைசி வரைக்கும் ஒரு கை பார்த்திருப்பேன்! ஜப்பான்காரன் கையிலாவது ராச்சியத்தைக் கொடுத்திருந்தாலும் கொடுத்திருப்பேனே தவிர, காங்கிரஸ்காரன் கையிலே கொடுத்திருக்க மாட்டேன்!

அதுபோனால் போவட்டும்! இங்கிலீஷ்காரன் கொடுத்து வைச்சது அம்மட்டுத்தான்! நாம் என்னத்துக்கு அதைப் பத்திக் கவலைப்படவேணும்? காங்கிரஸ் ராச்சியந்தான் இனிமேல் என்று ஏற்பட்டுப் போச்சு! நாளைக்கு ஒரு கண்டிராக்டோ, இண்டராக்டோ, எல்லாம் இவங்களிடத்திலேதான் கேட்டு வாங்குர்படியிருக்கும். வந்திருக்கிறவங்க இரண்டு பேரும் ரொம்பப் பெரிய மனுஷங்க என்று தோணுது. நல்ல விருந்து செய்து அனுப்பவேணும். உன் சின்னாயி கிட்டச் சொல்லு இல்லாட்டி, சின்னாயியை இங்கே கூப்பிடு; நானே சொல்டறேன்!" என்று மணியக்காரர் மூச்சு விடாமல் பொழிந்து தள்ளினார். வாசல் திண்ணையிலே உட்கார்ந்திருந்த மேற்படி காந்திக் குல்லாக்காரர்களின் காதிலே விழப் போகிறதே என்று கூட மணியக்காரர் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

ஏற்கெனவே உணர்ச்சி மிகுதியால் உள்ளம் தத்தளித்துக் கொண்டிருந்த பொன்னம்மாளோ, மணியக்காரர் பேசும்போது நடுவில் ஒரு வார்த்தை கூடப் பேச முடியாதவளாய், திறந்த வாய் மூடாமல் அடங்கா ஆவலுடன் அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டு நின்றாள். அவர் கடைசியில் சொன்னபடி சின்னாயியைக் கூப்பிடக் கூட அவளுக்குக் கா எழவில்லை.

நல்ல வேளையாகப் பொன்னம்மாளின் சின்னாயி, அதாவது மணியக்காரரின் இரண்டாவது மனைவி, தானாகவே அப்போது அங்கு வந்து விட்டாள். மறுபடியும் ஒரு தடவை அவளிடம் மணியக்காரர் பாடம் ஒப்புவித்து



# ஒரு பொய்

பி.எஸ்.அலமேலு

ஜன்னல் விளிம்பில் உட்கார்ந்து கொண்டு வனஜா ஏதோ பூவேலை செய்து கொண்டிருந்தாள். மாலைச் சூரியனின் மனோகரப் பொன்னொளியிலே அவளது அழகிய முகம் இன்னும் அதிக சோபையடைந்தது. அத்துடன் யாருக்காக அந்தக் கைக்குட்டையில் அவள் அழகு வேலை செய்து கொண்டிருந்தாளோ, அந்த இன்முகமும் அவள் முன்னால் நிற்பதுபோல் தோன்றவே அவள் வதனம் முன்னிலும் அதிக ஆனந்தத்துடன் மலர்ந்தது.

"என்ன தைத்துக் கொண்டிருக்கிறாய், வனஜா?" என்ற குரல் கேட்டதும் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள். அவளுடைய தாயார் வாயிற்படியில் நின்று கொண்டிருந்தாள்.

"ஒன்றுமில்லை, அம்மா! ஒரு கைக்குட்டையில் பூக்கள் தைத்துக் கொண்டிருக்கிறேன்!"

"விடிந்தால் தீபாவளி; இன்னும் எத்தனையோ வேலைகள் பாக்கியிருக்கு! இந்தத் தையல் வேலையைச் சாவகாசமாகச் செய்து கொள்ளலாமே!"

"இதோ வந்துவிட்டேன், அம்மா!"

"எல்லா வேலைகளையும் செய்து முடித்துவிட்டுத் தீபத்தையும் பொருத்திக் காட்டிவிட்டுக் கோவிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்துகொண்டு வா!"

"கோவிலுக்குப் போய் சுவாமி தரிசனம் செய்துகொண்டு வா!" என்று தாயார் கூறியது அவள் மனதைப் பூரிக்கச் செய்தது. தான் எடுத்துக் கொண்டிருக்கும் காரியம் சுபமாக முடிவதற்கு அது ஒரு நற்சகுனமாகத் தோன்றவே பொங்கி வழியும் ஆனந்தத்துடன் அவள் கை விரல்களை வேகமாய் ஓட்டினாள். அவள் இதயம் மலர்ந்ததைப் போலவே கைக்குட்டையிலும் பல விதமான புஷ்பங்கள் மலர்ந்தன.



தீபாவளியன்று பின்னிரவு. ஏதோ உள்ளச் சோர்வுடன் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான் ராஜு.

"அப்பா, ராஜு! எழுந்து வா, எண்ணெய் ஸ்நானம் செய்ய!" என்று கூப்பிட்டாள் அவன் தாயார் கோமளம்.

"இப்போது என்ன அம்மா, அவசரம்? இன்னும் சற்றுப் பொறுத்துத்தான் குளிக்கிறேனே!"

"ஏண்டா, நல்ல நாளும் அதுவுமாக அலுத்துக் கொள்கிறாய்? வெந்நீர் ஆறி விடும். சீக்கிரம் எழுந்து வா!"

ராஜு வேண்டா வெறுப்பாக எழுந்து கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான்.

எல்லாரும் ஸ்நானம் செய்து விட்டார்கள். கூடத்தின் நடுவில் குத்து விளக்கைப் பொருத்தி வைத்திருந்தது. ராஜுவின் தகப்பனார் தாம்பாளத்திலிருந்து புது வஸ்திரங்களை எடுத்து அவரவர்களிடம் கொடுத்துக் கொண்டிருந்தார்.

உணர்ச்சியற்ற யந்திரம்போல் ராஜுவும் ஸ்நானம் செய்துவிட்டு வந்து தன் வஸ்திரத்தை வாங்கிக் கொண்டான்.

அவன் உள்ளம் அப்போது பழைய நினைவுகளால் சூழ்ந்து கொண்டிருந்தது. "ஆகா! போன தீபாவளி எவ்வளவு குஷியாக நடந்தது! தீபாவளிக்கு முன் தினமே மாமா, மாமி, வனஜா எல்லாரும் வந்துவிட்டார்கள். அப்பா ஒரு பட்டுச் சிற்றாடையை எடுத்து அம்மாவிடம் கொடுத்தார். அம்மா அதைப் பிரித்து வனஜாவிடம் கொடுத்தாள். அவள் அதை வாங்கிக்கொண்டு புன்னகை தவழ அம்மாவுக்கு நமஸ்காரம் செய்தாள். "மனதிற்குப் பிடித்த கணவனை அடைந்து சுகமாயிருப்பாய்!" என்று அம்மா அவளை மனமார ஆசீர்வாதம் செய்தாள். வெட்கத்தால் தன் கன்னங்கள் சிவக்க வனஜா அந்தச் சிற்றாடையுடன் பக்கத்திலுள்ள அறைக்கு ஓடி விட்டாள். அப்போது ஜிவ்வென்று சிவந்த அவளது ரோஜாக் கன்னங்கள் தான் எவ்வளவு அழகாக இருந்தன!" என்றெல்லாம் எண்ணி அலைமோதியது ராஜுவின் உள்ளம்.

மனதின் கொந்தளிப்பு அவ்வப்போது முகத்திலும் பிரதிபலிப்பதைக் கவனித்த அவன் தந்தை சுப்பராமய்யர், "என்னடா, ராஜு! ஏன் ஒரு மாதிரியாய்

இருக்கிறாய்? உடம்புக்கு ஒன்றும் இல்லையே?" என்று விசாரித்தார்.

ராஜு ஒன்றும் பேசாமல் குன் கொட்டி மௌனம் சாதித்தான்.

ஆனால் கப்பராமய்யர் வற்புறுத்திக் கேட்கவே, "உடம்புக்கு ஒன்றுமில்லை, அப்பா! மனதிற்குத்தான் சந்தோஷமில்லை. சென்ற வருஷம் நடந்த குதூகலத் தீபாவளிக்கும் இந்த வருஷம் நடக்கும் சூனியத் தீபாவளிக்கும் எவ்வளவு வித்தியாசம்!" என்றான்.

அவனுடைய வார்த்தைகள் கோமனத்திற்குக் கோபத்தை மூட்டின. "ஏண்டா, என்ன குறைவைக் கண்டுவிட்டாய்? நல்ல நாளும் அதுவுமாகச் சூனியமான் என்கிறாயே?" என்று சினந்தான்.

ராஜுவுக்கும் சிறிது கோபம் மூளத்தான் செய்தது. "என் அம்மா சூனியமாயில்லை? முன் வருஷங்கள்போல் இல்லாமல் இம்முறை மட்டும் மாமா அகத்தினர் வராதது குறையாகத் தோன்றவில்லையா, உனக்கு? அப்பாதான் வைராக்கியம் பாராட்டுகிறார் என்றால் உனக்குமா இப்படிச் சொந்தத் தமையன் மீதும் அவருடைய குழந்தைகள்மீதும் விரோதம் தோன்றும்? முன்பெல்லாம் 'வனஜா, வனஜா!' என்று உயிரை விடுவாயே! குழந்தைக்கு இதைக் கொடுக்கவேண்டும், அதைக் கொடுக்கவேண்டும் என்று பறப்பாயே! இப்போது அந்தப் பாசமும் பரிவும் எங்கே போய் விட்டது? பணத்தின் முன்னால் பந்தமும் பாசமும் பறந்து போச்சா? கேவலம், நூறு ரூபாய்ப் பிச்சைக் காசுக்காக அவ்வளவு அன்னியோன்னியமாயிருந்த இரண்டு குடும்பங்களும் ஒரேயடியாய் இப்படியா பிரிந்து போவது?" என்றான் உணர்ச்சி தாங்காமல்.




"ஆமாண்டா, ஆமாம்! நீ ரொம்பப் படித்தவன். உன்னைத்தனை தத்துவ ஞானமும் பக்குவமும் எங்களுக்கு இன்னும் வரவில்லை!" என்று ஏகத்தாளம் செய்தார் கப்பராமய்யர்.

ராஜு ஒன்றும் பேசாமல் 'விர்'ரென்று தன் அறைக்குப்போய் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டான். அவன் எவ்வளவு நேரம் சிந்தனை லோகத்தில் திரிந்து கொண்டிருந்தானோ தெரியாது. "மாமா, இந்தப் பொட்டணத்தை உங்களிடம் கொடுக்கச் சொன்னார்கள்!" என்று யாரோ சொல்வது கேட்டதும் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான். கோடி வீட்டுக் கோபுப் பயல் அவன் கையில் ஒரு சிறு காகிதப் பொட்டணத்தைக் கொடுத்து விட்டு வேகமாய் வெளியே சென்றான்.

ஆச்சரிய மடைந்த ராஜு ஆவலுடன் பொட்டணத்தைப் பிரித்தான். அதனுள் அழகாக மடித்து வைக்கப்பட்டிருந்த கண்ணைக் கவரும் கைக்குட்டை ஒன்று இருந்தது. அதைக் கண்டதும் அவனுடைய நயனங்கள் ஆனந்தத்தால் விரிந்தன. கைக் குட்டையைப் பிரித்ததும் ஒரு சின்னஞ் சிறு துண்டுக் கடிதம் கீழே விழுந்தது.

"அன்புள்ள அத்தானுக்கு,

சென்ற தீபாவளி எவ்வளவோ குதூகலமாகக் கழிந்தது! இந்த வருஷம் அத்தகைய பாக்கியம் நமக்குக் கிட்டவில்லை. ஆனாலும் இந்த அற்பப் பொருளை என் அன்புக் காணிக்கையாக ஏற்றுக் கொள்ளுங்கள்.

வனஜா."

கடிதத்தைப் படித்து முடித்ததும் ராஜு ஏதோ இன்பத்தில் ஆழ்ந்தவனாய்க் கைக்குட்டையைப் பிரித்து முகத்தில் ஒத்திக் கொண்டான். அவன் கண்களிலிருந்து உதிர்ந்த இரண்டு நீர் முத்துக்கள் அதன்மேல் உருண்டு ஓடின!

★

அன்று மாலை கூடத்தில் உட்கார்ந்து விளக்குக்கு எண்ணெய்த் திரியிட்டுக் குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டிருந்தாள் வனஜா. வாசலில் யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். மறுகணம் அவளுடைய கண்கள் ஆனந்தத்தால் மலர்ந்தன. "அத்தான்! கடைசியில் இங்கு வர வழியும் தெரிந்ததா!" என்றாள்.

உள்ளே நுழைந்த ராஜு தன் கண்களைச் சுற்றிலும் ஒரு முறை சுழற்றிப்



பார்த்துவிட்டு ஊஞ்சலில் உட்கார்ந்தான்.

அவனுடைய மௌனம் வனஜாவுக்கு வேதனையை யளித்தது. "போகட்டும், அத்தான்! இந்த ஆறு மாதங்கள் பொறுத்தாவது ஏழை அம்மங்கார் ஒருவர் இருப்பது நினைவு வந்ததே! அந்தமட்டும் எங்கள் பாக்கியமே!" என்றாள்.

ராஜு அவளை நிமிர்ந்து பார்த்தான். நீண்ட பெருமூச்சுக்குப் பிறகு, "என்ன செய்வது, வனஜா! நம் பெற்றோர்களின் இஷ்டப்படிதானே நாம் நடக்க வேண்டியிருக்கிறது? ஆனாலும் இன்று காலை நீ அனுப்பிய அன்புப் பரிசுக்கு நன்றி கூறுதிருப்பது சரியாகுமா? மேலும் மற்றொரு முக்கியமான விஷயத்தையும் நான் உன்னிடம் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. இன்னும் ஐந்தாறு நாட்களில் நான் ராணுவத்தில் சேர்ந்து வடநாட்டுக்குப் போவதாக உத்தேசம். மறுபடியும் எப்போது வருவேன் என்று சொல்ல முடியாது. போகுமுன் கடைசியாக உன்னிடம் விடை பெற்றுக் கொள்ளவே வந்தேன்!" என்றான்.

வனஜாவின் கண்களில் நீர் துளித்தது. "அத்தான்! இன்னும் ஐந்தாறு நாட்களுக்குள்ளாகவா போகப்போகிறீர்கள்? அதுவும் வடநாட்டிற்கா!" என்று விம்மினாள்.

"எனக்கென்னவோ வரவர வெறுப்புத்தான் அதிகமாகிறது. நம்மவர்களின் குணமும் நடவடிக்கைகளும் எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை!" என்றான் ராஜு.

ஏதோ நினைத்துக் கொண்டவள்போல் உள்ளே ஓடிய வனஜா, சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு வெள்ளித் தட்டு நிறையத் தீபாவளி பக்ஷணங்களும், ஒரு டம்ளரில் தீர்த்தமும் கொண்டு வந்து ஊஞ்சலின் மீது வைத்துவிட்டு, "அத்தான்! தங்களுக்கு இந்த அபலை அளிக்கும் பிரிவுபசார விருந்து இதுதான்!" என்றாள்.

"ஆகா! இத்தகைய அன்பு விருந்து நடந்துதான் எத்தனை நாட்களாகி விட்டன!" என்று ஆனந்தமாய்ச் சொல்லிக்கொண்டே தட்டை அருகில் இழுத்து வைத்துக்கொண்டான் ராஜு.

சாப்பிட்டு முடிந்ததும், "வனஜா! விதி என்று ஒன்று இருக்கிறது என்றும், யாவும் அதன் முடிவுப்படியே நடக்குமென்றும் நாம் இருவரும் உறுதியாக நம்பியிருப்போம்" என்று சொல்லிவிட்டு, அந்த வீட்டை விட்டு வெளியேறினான் ராஜு. அவன் தெருக்கோடியில் மறையும் வரை அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் வனஜா.

★

"ஏன்னா! இப்படியே பேசாமல் உட்கார்ந்திருந்தால் என்ன அர்த்தம்? பையன் வீட்டை விட்டுப் போய் இரண்டு வருஷம் ஆகிறதே. நீங்களாவது ஒரு முறை போய்க் குழந்தையைப் பார்த்துவிட்டு வரக்கூடாதா? ஏதோ காலா




காலத்தில் ஒரு கால் கட்டையும் அவனுக்குக் கட்டிப் போட்டால்தானே..." என்று தன் கணவனிடம் ஒரு நாள் ஆரம்பித்தாள் கோமளம்.

"என்னடி இது! நீ பாட்டுக்கு அடுக்கிக்கொண்டே போகிறாயே! நான் மட்டும் கம்மாவா இருக்கிறேன்? எழுதும் கடிதங்களுக்கு அவன் பதில்கூடப் போடுவதில்லை. கலியாண விஷயத்தைக் குறித்து எழுதினால், 'கல்யாணம் செய்து கொண்டால் மைத்துனன் என்று ஒருவன் ஏற்படலாம். பிறகு மனஸ்தாபம் என்றும் தோன்றும். கல்யாணம் செய்து கொள்ளாமலேயே இருந்து விட்டால் வம்புக்கு இடமேயில்லையல்லவா?' என்று ஏகத்தாளம் செய்கிறான்! என்ன அதிகப்பிரசங்கித்தனம்!" என்றார்.

அதே சமயம் வாசலிலிருந்து "ஸார், தபால்!" என்ற குரல் கேட்கவே, சுப்பராமய்யர் எழுந்து வெளியே வந்தார். தபால்காரன் அவர் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

பூஜ்ய..........

"உபயகுசலோபரி. நமஸ்காரம். தங்கள் புதல்வன் சிரஞ்சீவி ராஜுவின் ஜாதகம் என் சகோதரன் பெண்ணுக்கு நன்றாகப் பொருந்தியிருக்கிறது. பெண்ணின் தகப்பனார் இங்கு உத்தியோக மாறுதலாய் வந்து இரண்டு மாதமாகிறது. பெண்ணும் தற்போது பெற்றோருடன் இங்கேயேதான் இருக்கிறாள். ராஜு பெண்ணை நேரில் பார்த்திருக்கிறான். அவனுக்குப் பெண்ணைப் பொருத்த வரையில் பூரணத் திருப்திதான்.

இனி பாக்கி விஷயங்களும் தீர்மானமாகி விட்டால் அடுத்த முகூர்த்தத்திலேயே விவாகத்தை நடத்திவிடலாம். ஆகவே, தங்கள் அன்பார்ந்த பதிலை எதிர்பார்த்து நிற்கிறேன்.

இங்ஙனம்:
கிருஷ்ணய்யர்."

கடிதத்தைப் படித்து முடித்ததும் கோமளத்தின் உடல் ஆனந்தத்தால் பூரித்தது. "ஏதோ இந்த மட்டும் பையனுக்குப் பெண்ணைப் பிடித்திருப்பது பெரியவர்கள் செய்த பாக்கியம் தான். என்னமோ, அன்று குழந்தையையே பண்ணிக் கொண்டு விடலாமென்று எண்ணிக் கொண்டிருந்தோம். அவனும் "வனஜா, வனஜா!" என்று உயிராக இருந்து வந்தான். போதாத காலத்திற்கு மனஸ்தாபம் ஒன்று குறுக்கே முளைத்தது. அதோடு அண்ணனும் உத்தியோக மாற்றுதலாகி ஊரை விட்டே போய்விட்டான். ஒரு வருஷமாக அவன் இருக்கிற இடம்கூடத் தெரியவில்லை. போகட்டும், எல்லாம் நன்மைக்குத்தான் என்பார்கள். ஏதோ கல்யாணப் பேச்சை எடுத்ததும் சுபமாகக் கல்யாணக் கடிதாசே வந்திருக்கிறது. நல்ல சகுனம் தான்; மறு தபாலிலேயே பதில் எழுதிப் போட்டு விடுங்கோ!" என்று தன் கணவனைத் தூண்டினாள் கோமளம்.

"அம்மாளின் ஆக்ஞைக்கு எதிர்ப்பும் உண்டோ?" என்று சொல்லிக் கொண்டே, ஐயரும் பேனாவையும் மைக்கூடையும் தேடிக்கொண்டு போனார்.

★

நீ ளவில் தார் போட்ட ரஸ்தாமீது வாடகைக் கார் ஒன்று 'விர்'ரென்று பறந்து கொண்டிருந்தது. "ஸாக்ஷாத் கிருஷ்ணபரமாத்மாதான் இப்படிக் கிருஷ்ணய்யராக வந்திருக்கிறார் போலும்!" என்ற சிந்தனையில் தன்னையும் மறந்து சென்ற கோமளம் கார் நின்றதைக்கூட அறியவில்லை.

"மாப்பிள்ளை, வாருங்கள்!" என்று வரவேற்றவரின் குரலைக் கேட்டுக் கோமளம் திரும்பிப் பார்த்தாள்.

வீட்டு வாசலில் தன் தமையன் நாராயணய்யர், தம் மனைவியுடன் நின்று கொண்டிருப்பதைக் கண்டதும் திடுக்கிட்டவளாய்த் தன் கணவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

அவர் ஒன்றும் விளங்காமல் ராஜுவின் முகத்தைப் பார்த்தார். அவன் முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லை.

கிருஷ்ணய்யர் அவருடைய முகமாறுதலைக் கவனித்துவிட்டு, "என்ன, பார்க்கிறீர்கள்? அதெல்லாம் சாவகாசமாகப் பேசிக் கொள்வோம். வாருங்கள், முதலில் உள்ளே போய்க் கை கால்களைக் கழுவிக் கொண்டு காப்பி சாப்பிடுவோம்!" என்று சொல்லிக் கொண்டே சுப்பராமய்யரின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனார்.

காப்பி சாப்பிட்டபின் பாயின்மீது மூவரும் அமர்ந்தனர்.

"என்ன, மேற்கொண்டு எப்படி எப்படி செய்ய வேண்டுமென்று முடிவு செய்து விடலாமே!" என்றார் கிருஷ்ணய்யர், சுப்பராமய்யரையும் நாராயணய்யரையும் பார்த்து.

சுப்பராமய்யருக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. "என்ன ஓய்! கடைசியில் பொய் சொல்லியல்லவா என்னை ஏமாற்றி விட்டீர்?" என்று சீறினார்.

"கோபித்துக் கொள்ளக் கூடாது. 'ஆயிரம் பொய் சொல்லி ஒரு கலியாணத்தைப் பண்ணி வை!' என்று நம் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்! நான் ஒரு பொய்தானே சொன்னேன்? மேலும் நாராயணய்யர் எனது நெடுநாளைய நண்பர். அவரை நான் என்னுடைய சகோதரராகவே பாவிக்கிறேன். ராஜு என்னிடம் எல்லாவற்றையும் சொன்னான். பார்க்கப்போனால் நாம் எதற்காகச் சிரமப் படுகிறோம்? எல்லாம் நமது குழந்தைகளின் க்ஷேமத்தை உத்தேசித்தே யல்லவா? அவர்கள் இருவர் மனமும் ஒன்று சேர்ந்தபின், கேவலம் நமக்குள் இருக்கும் அற்ப மனஸ்தாபம் இதில் குறுக்கே நிற்க வேண்டுமா? நான் செய்தவை தவறாக இருந்தால் பெரியவர்கள் மன்னித்துக் கொள்ளுவார்களாக!" என்று மங்களம் பாடித் தமது பிரசங்கத்தை முடித்தார் கிருஷ்ணய்யர்.

மந்திரத்தில் கட்டுண்ட நாகப் பாம்பு போல் ஏதும் சொல்ல வகையறியாது விழித்தார் சுப்பராமய்யர். அதற்குள் சமையல் அறையில் நாத்தனாரும் மதனியும் குலாவும் குரல் அவர் செவியில் விழுந்தது. அதுதான் சமயமென்று கிருஷ்ணய்யரும் அன்றே நிச்சயதார்த்தம் செய்து விடுவதற்காகப் புரோகிதரைத் தேடிக் கொண்டு வெளியே சென்றார்.

★

அடுத்த தீபாவளியன்று சுப்பராமய்யர் வீட்டு வாசலில் வாத்தியக்காரன் ஜாம் ஜாம் என்று முழங்கிக் கொண்டிருந்தான்.

"ரோசனே ரோசமான: சோபன: கலியாணஹ" என்று புரோகிதர் மந்திரம் உச்சரிக்க, கோமளம்மாள் ஒரு தட்டில் மஞ்சள் தடவி வைக்கப்பட்டிருந்த புடவையை எடுத்து வனஜாவிடம் கொடுத்தாள்.

"அம்மா! இந்தத் தடவையாவது ஜாக்கிரதையாக ஆசீர்வாதம் செய். மூன்றும் தீபாவளியன்று நீ செய்த ஆசீர்வாத பலத்தால்தானே இப்போது இந்தப் பிடிக்காத தீபாவளியைக் கொண்டாடுகிறாய்!" என்றான் ராஜு சிரித்துக்கொண்டே.

"அம்மா, வனஜா! அடுத்த வருஷத்திற்குள் நீ ஒரு புத்திரனைப் பெற்று இந்தக் குறும்பனிடம் கொடுத்து இவனைப் படாத பாடு படுத்தி வைப்பாயாக!" என்று கோமளம் தன்னை நமஸ்கரித்த வனஜாவை ஆசீர்வதித்தாள்.



# கம்பனுடன் இரண்டு நாள்

[ஒரு நிருபர்]

"கம்பன் அதிர்ஷ்டம் கெட்டவன். நல்ல அதிர்ஷ்டம் உடையவன் என்றால் தமிழ் நாட்டில் வந்து ஏன் பிறக்கிறான்?" என்று கொஞ்ச காலத்திற்கு முன்பு ஒரு பேராசிரியர் அங்கலாய்த்துக் கொண்டார். அந்த ஆசிரியர் இன்று ஜீவியவந்தராக இல்லை. அவர் மட்டும் இன்று ஜீவியவந்தரா யிருந்து, 12-10-46, 13-10-46 தேதிகளில் திருநெல்வேலியில் நடந்த கம்பன் திருநாளைப் பார்த்திருப்பாரேயானால் "நான் சொன்னதெல்லாம் தப்பு, தப்பு!" என்று தமிழ் மக்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருப்பார்.

"இருபது இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் கம்பன் அதிர்ஷ்டம் கெட்டவனாக இருந்திருக்கலாம். ஆனால் என்று ரஸிகமணி டி. கே. சி யை மலேரியா சுரம் பிடித்ததோ, என்று அவர் கம்ப ராமாயணத்தைக் கருத்தூன்றிப் படிக்க ஆரம்பித்தாரோ, அன்றே கம்பன் பாக்கியசாலி! காரைக்குடி சா. கணேசன் என்று கம்பன் புகழ் பாடி கன்னித் தமிழ் வளர்க்கும் தொண்டில் ஈடுபட்டாரோ அன்றே கம்பன் பாக்கியசாலி! டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி என்று தம்முடைய 'ரிடையர்டு' வாழ்க்கையில் கம்பனிடத்தில் வந்து சரண் புகுந்தாரோ அன்றே கம்பன் பாக்கியசாலி!" என்று வரவேற்புரை நிகழ்த்திய தமிழ் அன்பர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் பேசி முடித்ததும் எழுந்த கரகோஷம் வானத்தையே கிடுகிடென்று ஆடும்படி செய்தது.

"கம்பனுக்குத் திருநாள் என்று நடத்துவது?" என்பது பெரிய பிரச்னை அல்ல. கம்பன் பிறந்த ஊராகிய தேரழுந்தூரிலும், அவன் சமாதி கொண்டிருக்கும் நாட்டரசன் கோட்டை, அதை அடுத்த காரைக்குடியிலும் அவன் காவியம் அரங்கேறிய தினமாகிய பங்குனி அத்தத்திலே நடைபெறுகிறது சிறப்பாக. நடைபெறட்டும். வருஷத்தில் மீதம் 364 நாட்கள் இருக்கத்தானே செய்கின்றன! தமிழ் நாட்டார் அந்த 364 நாட்களையும் பயன்படுத்திக் கொள்ளட்டுமே என்கிற மனப்பான்மையோடுதான் திருநெல்வேலி விழா நவராத்திரி உற்சவத்தை ஒட்டி நடைபெற்றிருக்கிறது.

விழா நடந்த இந்த இரண்டு தினங்களில் கவிச் சக்ரவர்த்தி கம்பரே தம் பூத உடம்பை நாட்டரசன் கோட்டைச் சமாதியில் விட்டு விட்டுப் புகழுடம்புடன் வந்து திருநெல்வேலியில் கூடிய தமிழ் அன்பர்களிடையே பிரசன்னமாயிருந்தார் என்றால் அது மிகையல்ல. ஏராளமான செலவில் தயாரிக்கப் பட்ட கம்பர் படம் காரைக் குடியிலிருந்து திருநெல்வேலிக்கு வந்தது. கம்பர் திருவுருவமும் அவர் எழுதிய ராமாயணச் சுவடிகளும் யானைமீது அம்பாரியில் ஏற்றப்பட்டுத்

# கண் நிறைந்த கணவன்

கிரிஜா

"கை நிறைந்த பொன்னைக் காட்டிலும் கண் நிறைந்த கணவனே மேல்" என்று சொல்லுவார்கள். எனக்குக் கை நிறைந்த பொன்னுடன் கண் நிறைந்த கணவரும் கிடைத்தார்!

மணவறையில் எங்களைக் கண்டு இளம் உள்ளத்தவர்கள் பொறாமையால் அடிக்கடி பெருமூச்சு விட்டனர்; "திருஷ்டி படாமல் இருக்க வேண்டுமே!" என்று பெரியோர் கவலை யடைந்தனர். அத்தனை கோலாகல வைபவங்களுக் கிடையில்தான் நான் மிகப் பெருமையோடு அவருடைய கைகளைப் பற்றினேன். அந்த க்ஷணமே, ஆகாய விமானத்தில் இருவரும் அமர்ந்து ஆனந்த பவனி வரவேண்டும் — ஆகாய வீதியில் அவருடன் தனிமையில் பறந்து இன்புற வேண்டும் என்றெல்லாம் துடித்துப் பறந்தது என் இளமை யுள்ளம். ஆனால், கட்டை வண்டி வேகத்தில் செல்லும் பெரியோர்களின் கட்டுப்பாட்டிற்குப் பணிந்து அவரைக் கொஞ்சம் நான் பிரிந்து இருக்கும்படியே நேர்ந்தது.

பிரிவு என்னும் துன்பத்தைத் தந்த அந்த இடைக்காலத்தில்தான் என் மனம் என்னென்ன கோட்டைகள் கட்டின! அவருடன் ஆரம்பிக்கப் போகும் புது வாழ்வில் எப்படியெல்லாம் நடந்து அவரை மகிழ்விக்கலாம்? அவர் முகம் புன்முறுவலால் மலர்ந்திருக்கும் பொழுது என்னவெல்லாம் பேசி மகிழலாம்? அவர் முகம் கோபத்தால் சிவந்திருக்கும்பொழுது எந்த இனிய வார்த்தைகளால் அவருடைய கோபத்தை அகற்றலாம்? — இம்மாதிரிப் பல்வேறு கேள்விகளும், அதற்கான பதில்களும் தோன்றி என் உள்ளத்தையே அவரிடம் கொள்ளை கொண்டு ஓடின!

அவ்வளவு ஆவலுடன் நான் எதிர்பார்த்த அந்த நாளும் வரத்தான் வந்தது. ஆனால் என்ன ஏமாற்றம்!

ஐந்து வருஷ காலம் வைத்தியக் கல்லூரியை முற்றுகையிட்டு எம். பி. பி. எஸ். என்னும் பட்டத்தைச் சுமந்து வெளிவந்த என் கணவர், மதுரையிலுள்ள அவர் மாமாவின் சொந்த 'டிஸ்பென்ஸரி'யிலேயே வேலைக்கு அமர்ந்தார்.

டாக்டர்களின் கடமை எத்தகையது என்பதை நான் உணராமலில்லை. ஆயினும் தம் மனைவியின் முகத்தை ஒரு நிமிஷமாவது நிமிர்ந்து பார்க்கக்கூடவா அவகாசம் கிடையாது!

என் கணவர் வேலை செய்யும் 'டிஸ்பென்ஸரி'யிலேயே ஒரு ஆராய்ச்சி அறையும் இருந்தது. 'டிஸ்பென்ஸரி' மூடியிருக்கும் நேரங்களில் அவர் அந்த ஆராய்ச்சி அறைக்குள் புகுந்துகொண்டு விடுவார். சாப்பிட உள்ளே வரும் அந்தக் கால் மணி அவகாசத்தைக் கூட வீணாக்காமல், கையில் ஒரு ஆராய்ச்சிப் புத்தகத்துடன்தான் வருவார்.

"குழம்பு போதுமா?"

"உம்......"

"வெண்டைக்காய் சாம்பார் வேண்டுமா, மிளகுக் குழம்பு வேண்டுமா?"

"உம்...உம் ......!"

எல்லாவற்றிற்கும் அவரிடமிருந்து வரும் பதில் இந்த 'உம்' ஒன்றுதான். நானும் என் சாமர்த்தியம் முழுவதையும் உபயோகித்து அவருடைய திருஷ்டியைக் கவர முயன்றேன். எல்லாம் விழலுக்கிறைத்த நீராகவே முடிந்தன.

வைகையாற்றின் கரைமீதிருந்த அந்தப் பங்களாவில் எனக்கென்று பிரத்தியேகமாக எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தது. சமையலுக்கு ஆள்; சுற்று வேலைக்கு ஆள்; நான் கூப்பிட்டவுடன் ஓடி வர ஒரு ஆள்; இப்படி பல வேலைக்காரர்களின் மத்தியில் நான் ஒரு கொலுப் பொம்மையைப் போலவே இருந்தேன். இந்த வைபோகங்களுடன் வாழும் என்னைக் காட்டிலும் அந்தக் கீற்றுக் குடிசையில் வாழும் தோட்டக்கார வேலனின் மனைவி தேவானை எவ்வளவோ சந்தோஷமாக இருந்தாள்! தேவானையின் முக தரிசனத்திற்காக ஒரு நாள் முழுதும் வேண்டுமானாலும் பட்டினி கிடப்பானே, வேலன்!

நாட்களும் மெல்ல நகர்ந்தன. எங்கள் இல்வாழ்க்கையைப் பார்த்துப் போக வந்திருந்தார் என் மாமனார். இரண்டு தினங்களுக்குப் பின் அவர் ஊருக்குப் புறப்பட்டார். அன்று நான் மனதைத் திடம் செய்துகொண்டு அவர் இருந்த ஆராய்ச்சி

அறைக்குள் நுழைந்தேன். பூதக்கண்ணாடியின் மூலம் எதையோ மிகக் கூர்மையாக ஆராய்ந்து கொண்டிருந்தவருக்கு நான் வந்து நிற்பது எப்படித் தெரியும்?

நான் மெல்ல, "அப்பாவுடன் நானும் திருச்சிக்குப் போகட்டுமா?" என்றேன்.

அவர் திடுக்கிட்டு நிமிர்ந்து, "நீயா! என்ன சொன்னாய்? திருச்சிக்குப் போக வேண்டுமா?" என்று கேட்டு விட்டுச் சற்று மௌனமாக இருந்தார்.

பிறகு, "நீ அவசியம் போகவேண்டுமா?" என்று கேட்டார்.

"நான் இங்கே இருக்க வேண்டிய அவசியம் உங்களுக்கு இல்லாதபோது, நான் எங்கே போனால்தான் என்ன?"

"சரி, சரி! அப்பாவிடம் சொல்லி உன்னை அழைத்துப் போகச் சொல்லுகிறேன், போ!" என்றார் வெறுப்புடன்.

"வெளியே போ!" என்று சொல்லாமல் சொன்ன அவர் வார்த்தைகளால் என் மனம் துன்புற்றுத் துடித்தது. வாயிற்படி தாண்டியதும் ஏனோ மீண்டும் திரும்பிப் பார்த்தேன். அப்போதும் அவர் அந்தப் பாழாய்ப் போன பூதக் கண்ணாடியுடன் ஐக்கியமாகி யிருந்தார்!

## 2

திருச்சிக்கு வந்த பின் ஒருவாறு என் துன்பத்தை மறக்க முயன்றேன். என் கணவருக்குப் பின் ஆணும், பெண்ணுமாக ஏழு குழந்தைகள் இருந்தார்கள். அவர்களுக்குச் சிச்ருஷை செய்வதில் என் காலத்தைக் கழித்தேன். என் மாமியார், மாமனார் இருவருக்கும் என்னால் முடிந்தவரை பணிவிடைகள் செய்து ஒருவாறு மனச் சாந்தி பெற்றேன்.



அன்று "வாடாப்பா, மணி! நீ இன்று வருவதாக ஒரு வரி எழுதப்படாதோ?" என்ற கேள்வியுடன் என் மாமியார் தம் பிள்ளையை வரவேற்கவே, நான் திடுக்கிட்டு நிமிர்ந்தேன். கையில் தோல் பையுடன் உள்ளே வந்து கொண்டிருந்தார் என் கணவர்.

"அம்மா, ராஜம்! மணிக்குக் காப்பி போடு! என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தார் என் மாமியார். நான் அவர் சொல்வதற்கு முன்னரே எல்லாம் தயார் செய்து விட்டேன். ஆனால் அதை நானே கொண்டுபோய்க் கொடுக்க இஷ்டப்படாமல் தயங்கி நின்ற சமயத்தில் என் மாமியார் வரவே டிபனை அவரிடமே கொடுத்து, "அடுப்பில் காரியமிருக்கு; இதை உங்கள் பிள்ளையிடம் கொடுத்து விடுங்கள்!" என்றேன்.

இரவு சாப்பாட்டின் போதும் இலை, மணை எல்லாம் தயாராக எடுத்துப் போட்டு விட்டு, "அம்மா! சற்று உங்கள் பிள்ளைக்குச் சாப்பாடு பரிமாறி விடுகிறீர்களா? நான் சந்திரனைத் தூங்கப் பண்ணிவிட்டு வந்து விடுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே, என் மைத்துனனைத் தூக்கித் தோளில் சாத்திக்

கொண்டு படுக்கை யறைக்குள் நுழைந்து விட்டேன்!

இம்மாதிரி அவருக்கு நான் செய்ய வேண்டிய சிச்ருஷைகள் யாவையும் தந்திரமாகப் பிறர் மூலமாகவே நிறைவேற்றினேன். இரவு பாலையும் என் நாத்தனார் சியாமளியிடம் கொடுத்து அனுப்பி விட்டு, வழக்கம்போல் சியாமளியின் அறையிலேயே நானும் படுத்துக்கொண்டு விட்டேன்.

இதனெல்லாம் அவராக என்னோடு பேச வருவார், அல்லது என்னைக் கூப்பிட்டனுப்புவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. அவ்விதம் செய்யக் கூடிய ஆசாமி அவர் அல்ல என்பதும் எனக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் என் அன்பையும் என்னையும் சற்றும் மதிக்காத அவரை நான் மட்டும் ஏன் மதிக்க வேண்டும்?

அன்று இரவு நான் சற்றும் எதிர்பாராத சம்பவம் நடந்தது. நடு இரவுக்குப் பின் மாடிப்படிகளில் யாரோ இறங்கி வரும் சத்தம் கேட்டது.

"சியாமளி!"

ஆம்; அவர்தான்!

"சியாமளியை எழுப்பி அனுப்புவதா? அல்லது நாமே போவதா!" என்ற போராட்டம் என் மனதில் எழுந்தது. அதற்குள் சியாமளியே விழித்துக் கொண்டு விட்டாள்.

"என் அண்ணா!"

"கொஞ்சம் தீர்த்தம் கொடு!"

"உன் அறையில் நான் தீர்த்தம் வைத்திருந்தேனே!"

"வைத்திருந்தாயா? நான் கவனிக்கவில்லையே!"

"சரி, இதோ தருகிறேன்!" என்று சொல்லி, சியாமளி அவருக்குத் தீர்த்தம் எடுத்துக் கொடுத்தாள்.

அவர் அதைச் சாப்பிட்டுவிட்டு, "சியாமளி! உன் மன்னி எங்கே? தூங்கி விட்டாளா?" என்று கேட்டார்.

"ஆமாம், அண்ணா! ஏன், அவளை எழுப்பட்டுமா?" என்று கேட்டாள் சியாமளி.

சிறிது நேரம் அவர் எதுவும் பேசவில்லை. பிறகு, "வேண்டாம்; அவளை எழுப்ப வேண்டாம்!" என்றார்.

அடுத்த நிமிஷம் அவர் மாடிப் படிகளில் ஏறிச் சென்ற சத்தம் என் காதில் விழுந்தது. அதைக் கேட்ட எனக்கு இருதய ஓட்டமே நின்றுவிட்ட மாதிரி இருந்தது. கிடைத்த கண்களை மீண்டும் இழந்து நிற்கும் குருடனைப்போல் உள்ளக் குமுறலை அடக்க முடியாமல் நான் விம்மினேன்.

மறுதினம் மாலையே அவர் ஊருக்குப் புறப்பட்டு விட்டார்! நாம் ஒரு முக்கிய காரியமாக மதனப்பள்ளிக்குச் செல்வதாகவும், வர இரண்டு மாதங்களாவது ஆகுமென்றும், அதுவரை சௌக்கியத்திற்கு மதனப்பள்ளிக்கே எழுதுமாறும் அம்மாவிடம் சொல்லிவிட்டுக் குழந்தைகள் ஒவ்வொருவரிடமும் தனித்தனியாகச் சொல்லிக்கொண்டு அவர் புறப்பட்டார். நான் ஒருத்தி அங்கு இருக்கிறேன் என்ற எண்ணமே தமக்கு இருப்பதாக அவர் ஏனோ காட்டிக் கொள்ளவில்லை!

உயிருடன் சமாதி செய்யப்பட்டவனது உள்ளம்போல் என் உள்ளம் தவித்தது. என்மீது ஏற்பட்ட கோபத்தால் அவர் அவ்விதம் செய்தாரா? தாம்பத்ய வாழ்வின் இன்பத்திற்கே உலை வைப்பது அற்பமான சிறு தவறுகள்தான் என்று நான் கேள்விப்பட்டதுண்டு. அம்மாதிரி என் பேரில் தவறு



என் வாழ்வின் இன்பத்திற்கே முற்றுப் புள்ளி வைத்து விடுமோ? ஆனால் அவர் செய்தது மட்டும் தவறு இல்லையா? தம்மை நம்பி — தம் வாழ்வில் பங்கு கொள்ள வந்த ஒரு இளம் பெண்ணின் மனதைத் தாம் புண் பண்ணி விட்டோமே!' என்ற அங்கலாய்ப்பு அவருக்கு மட்டும் உண்டாகாமலே போய் விடுமா? ஆனாலும் இது கொடுமை!— கொடிக்கு ஆதாரமான கொம்பு முரடாகவும், முட்கள் நிரம்பியதாகவும் இருக்கலாம். ஆனாலும் துன்புற்றுத் தவிக்கும் கொடிக்கு ஆதாரம் அக்கொம்பு ஒன்று தானே? ஆனால், அக் கொம்பிற்கோ? கொடி சிறிது நழுவினாலும் அதை உதறி விட்டுப் பல்வேறு கொடிகளைத் தழுவி மகிழ உரிமையுண்டு!—இதை நினைத்தபொழுது என் உடல் நடுங்கிற்று.

கவலையால் என் உடல் நாளுக்கு நாள் இளைக்கத் தொடங்கிற்று. என்னுடைய நிலையைக் கண்டு கவலை கொண்ட என் மாமியார், கொஞ்ச நாட்கள் பிறந்தகத்தில் இருந்து வருமாறு என்னை அனுப்பினர்.

எமன்போல் என்னை வருத்திய அந்த நாட்களும் மெல்லப் போய்க் கொண்டு தான் இருந்தன. ஒரு நாள், "அக்கா, அக்கா! இதோ பார், அத்திம்பேர் போட்டோ!" என்று கூச்சல் போட்டுக் கொண்டே, கையில் பிடித்த தினசரிப் பத்திரிகையுடன் ஓடி வந்தான் என் தம்பி ரமணி. அந்தப் பத்திரிகையில் நாலு டாக்டர்களுக்கு மத்தியில் என் கணவரது படமும் இருந்தது. "இந்த டாக்டர்கள் நடத்திய ஆராய்ச்சியின் பயனாக 'எலும் புருக்கி' என்னும் தீராத வியாதியைத் தீர்ப்பதற்கான சிகிச்சா மார்க்கத்தைக் கண்டு பிடித்து விட்டனர்!" என்று கொட்டை எழுத்தில் அந்தப் படத்தின் கீழே விவரமும் கொடுக்கப்பட்டிருந்தது.

இதைப் பார்த்து வீட்டில் எல்லோரும் கொண்ட ஆனந்தம் கொஞ்சமல்ல. ஆனால், என் வாழ்வின் இன்பத்திற்கே சத்துருவாக நிற்கும் அந்த 'ஆராய்ச்சி' என்ற வார்த்தையைக் கேட்கவே பிடிக்காமல் என் உள்ளம் குமுறியது. தீராத வியாதியைத் தீர்க்கும் மருந்தைக் கண்டு பிடித்த அந்த மேதாவிக்கு, ஏனோ என் வியாதியைத் தீர்க்கும் மார்க்கம் மட்டும் இன்னும் தென்படவில்லை!

3

வழக்கத்தை அனுசரித்து என் தந்தை என்னுடைய புக்ககத்திற்கு, 'தீபாவளிக்கு மாப்பிள்ளையுடன் யாவரும் வருமாறு அழைப்பு அனுப்பினர். சீக்கிரமே என் மாமனாரிடமிருந்து பதிலும் கிடைத்தது. ஆராய்ச்சி முடிந்து மதனப்பள்ளியிலிருந்து திரும்பி வரப்போகும் தம் பிள்ளையை மட்டும் தீபாவளிக்கு அனுப்பி வைப்பதாக அவர் எழுதி யிருந்தார். எனக்கு இதில் கொஞ்சமும் நம்பிக்கை யில்லை. வீண் சபலம் என்று எண்ணினேன்.

தீபாவளிக்கு முதல் நாள் காலை வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தமும், அதைத் தொடர்ந்து கேட்ட ரமணியின் கூச்சலும் என்னைத் திகைப்படையச் செய்தன. என் காதுகளையே என்னால் நம்ப முடியவில்லை. எழுந்து ஜன்னல் மூலம் வெளிப்புறம் நோக்கினேன். என்ன விந்தை! வண்டியி லிருந்தும் இறங்கியது என் கணவரே தான்!

அவரைக் கண்டதும் என் உள்ளத்தில் பலவிதக் குழப்பங்கள்! தாய் தந்தையரின் சொல்லைத் தட்டமுடியாமல் 'விதியே' என்று வந்திருப்பாரோ! இல்லை, உண்மையாகவே என்மீது அன்பு பிறந்துவிட்டதோ! எது எப்படி யிருந்தாலும் இன்று என் இருப்பிடம் தேடி அவரே வந்துள்ளார். 'பெண்களின் விலைமதிப்பற்ற அன்பை நினைத்த பொழுது சுலபமாகப் பெற்றுவிட முடியாது!' என்பதை அவர் உணரும் படிச் செய்யவேண்டும் என்று நான் என் மனத்திற்குள் கருவிக் கொண்டேன்.

அன்று அவரை எதிர்கொண்டழைக்கவோ காபி, டிபன் கொடுக்கவோ நான் முன்வரவில்லை. தலைவலி என்ற சாக்கில் என் அறையை விட்டே வெளியே வராமல் இருந்து விட்டேன்.

அம்மா, அப்பாவுக்கோ தலைகால் புரியவில்லை. மகத்தான புகழ்பெற்ற மாப்பிள்ளையல்லவா வந்திருக்கிறார்! அப்பா அவரை ராஜோபசாரம் செய்து அழைத்துப் போய் மாடி ஹாலில் உட்காரவைத்து ஒரே புகழ் மாலையாகப் போட்டு அவரைத் திணற அடித்துக் கொண்டிருந்தார்.

அம்மாவுக்கோ ஒன்றுமே புரியவில்லை. வெந்நீர் அடுப்பில் வெண்கலப் பானையை வைத்து ஜலம் கொட்டுகிறாள்! சொஜ்ஜிக்குப் போடவேண்டிய ஏலப் பொடியைப் பஜ்ஜியில் தூவுகிறாள்! இப்படியாக வீடு அல்லோல கல்லோலப் பட்டது!

அடக்க முடியாத ஆவலால் தூண்டப் பட்டு, நான் மத்தியானச் சாப்பாட்டின் போது மெல்ல அவர் அறியா வண்ணம்

# ஒவ்வொரு தடவையும் வெள்ளையாகிறது

## — ஜாஸ்தி அழுக்குப் படிந்த இடங்கள் உள்பட

உங்கள் ஆடையை அணிந்திருக்கும் காலம் ஜாஸ்தி அழுக்குப் படியும் பாகங்களை சலவை செய்யும் முறையைப் பொறுத்திருக்கிறது! ஜாஸ்தி அழுக்குப்படியும் பாகங்கள் அணிவதில் சீக்கிரத்துடன் அதிகமாக உராயும் பாகங்கள்தான் என்பது ஞாபகமிருக்கட்டும்—அதனாலேயே, உங்கள் துணிகளை நிறைய சோப்பைத் தேய்த்து, தண்ணீரில் கசக்கி, அடித்துத் துவைக்கும்பொழுது இந்த பாகங்கள் முதலில் கெட்டுப்போகின்றன.

**உங்கள் துணிகளை ஸன்லைட் முறைப்படிச் சுத்தம் செய்து அடித்துத் துவைப்பதனாலேற்படும் சேதத்தை விலக்குங்கள்.**

ஸன்லைட்டின் ஏராளமான சுலபமாக இயங்கிற நுரையை கசக்க துணியிடையே நன்குப் புகுந்திக் கசக்கிறது. அது ஒவ்வொரு தடவையும் வெண்மையாக்குகிறது—அதோடு சேதமின்றி சுத்தமாகச் சலவை செய்கிறது. இச்சுத்தமான சோப், அடித்துத் துவைக்காமலே அழுக்கையகற்றுகிறது; துணிகளை இறகைப் போல் மிருதுவாகச் செய்கிறது; மேலும் உங்கள் கைகளை மென்மையாகவும் மழமழப்பாகவும் வைத்துக் கொள்கிறது.

இது
ஸன்லைட் முறைப்படி
சுத்தம் செய்தது!




# ஸன்லைட் சோப்

S. 81-33 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED



எட்டயபுரத்தில் ராஜாஜியின் கையினால் இட்ட பாரதி ஞாபகார்த்த அஸ்திவாரம் இப்போது இந்த அழகிய கட்டிடமாக வளர்ச்சி யடைந்திருக்கிறது.

---

என்று கொஞ்சம் 'பிகு' பண்ணிக்கொண்டு பிறகு பேச ஆரம்பித்தேன்.

"பெரியோர்களே! இந்த சுவாப்பின் நாடகத்தை வாழ்த்த எனக்கு வயது போதாது. ஆராய்ச்சி செய்து அபிப்பிராயம் கூற அநுபவம் கிடையாது. ஆனால் ஒன்று மட்டும் சொல்லுவேன். இந்த நாடகம் 'பேஷா யிருக்கிறது' என்று 'கல்கி'யும் டி. கே. சி. யும் சொல்லிவிட்டதால், அது கட்டாயம் பேஷாகத்தான் இருக்க வேண்டும். கிர்க. சுவாப் என்னிடம் அபிமானம் வைத்திருப்பது போல் பாரதியாரிடமும் ரொம்பவும் அபிமானம் வைத்திருக்கிறார். அதுபற்றி ரொம்ப சந்தோஷம். ஆகையால் பாரதியாரும் நானும் "சரி நிகர் சமானமாக வாழ்வ மிந்த நாட்டிலே!" என்று சொன்னதோடு, இன்னும் பலவிதப் பொய்யா மொழிகளையும் கூறினேன்.

சபையோர் செய்த கரகோஷத்தை எப்படி வர்ணிப்பேன்? அதைப் பற்றி எழுதக் கை தூக்குது; அடக்கம் அமுக்குது; உணர்ச்சி தூக்குது; உள்ளம் அமுக்குது; விருப்பம் தூக்குது; வெட்கம் அமுக்குது!

பின்னர் சுவாப் எல்லாருக்கும் முக்கியமாகச் சபையோருக்கும் வந்தனம் கூறிவிட்டு, "சாமியோ, சரணம் ஐயப்பா!" என்று கோஷிக்கச் சபையோர் "ஐயப்பா சரணம் சாமியோ!" என்று பதில் கோஷம் செய்ய, இந்த விதமாக ஐயப்பனின் கிருபையால் வைபவம் பிரமாத வெற்றிகரமாக முடிவடைந்தது.

எல்லாரைக் காட்டிலும் நன்று விசேஷமாக வந்தனம் செலுத்தப்பட வேண்டியவர்கள் சபையோர்கள்தான் என்பதில் சந்தேகமில்லை. இரண்டரை மணி வரையில் நாடகம் பார்த்ததோடு, அப்புறம் ஒன்றரை மணி நேரம் உட்கார்ந்து பிரசங்கமும் கேட்டார்கள் என்றால், அவர்களுடைய அன்பையும் அபிமானத்தையும் ஊக்கத்தையும் தூக்கத்தையும் பற்றி என்னவென்று சொல்வ?

காலை நாலுமணிக்குத் தூங்குவதற்காகப் படுத்துக் கொண்டோம். இரண்டு மூன்று தடவை 'கல்கி'யை எழுப்பி, "பணம் பத்திரமா யிருக்கிறதா?" என்று கேட்டேன். "ஐயப்பன் அருளால் பத்திரந்தான்! நீங்கள் நிம்மதியாகத் தூங்கலாம்!" என்றார். "அப்படி என்றால் சரி!" என்று நானும் நிம்மதியாகத் தூங்கினேன்.

## 4. பாரதி மண்டபம்

ஐயப்பன் அருளால் மறுநாள் அதிகாலையில் ஆறு மணிக்குள் எல்லாரும் எழுந்து, கல்லிடைக்குறிச்சி ரயில்வே ஸ்டேஷனுக்குப் பிரயாணம் ஆனோம்.

எட்டயபுரம் போவதற்காக கோவில்பட்டி ஸ்டேஷனுக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு ரயில் ஏறினோம்.

எந்தப் புனித கைங்கரியத்துக்காக ஸ்வாப் ராஜமாணிக்கம் பணம் கொடுத்தாரோ, அந்த பாரதி மண்டபக் கட்டிட வேலை எந்த நிலையில் இருக்கிறது என்று பார்க்கும் ஆசை எங்களைப் பிடர் பிடித்து உந்தியது.

அதைக் காட்டிலும் அதிக வலிமையுடன் கல்லிடைக்குறிச்சி ஸ்டேஷனில் ரயில் ஏறிய ஜனக்கூட்டம் எங்கள் பிடரியைப் பிடித்து ரயிலுக்குள்ளே தள்ளியது!

வழியில் திருநெல்வேலி ஜங்ஷன் வந்ததும், "இட்டிலி கிடைக்குமா?" என்று நண்பர்கள் பலர் தனித் தனியாகவும் கூட்டம் கூட்டமாகவும் விசாரித்தார்கள். என்ன தான் விசாரித்தும் இட்டிலி கிடைக்கவில்லை. உடனே சிதறிக் கிடந்த நண்பர்களை எல்லாம் ஒன்று சேர்த்து ஒரு மாபெரும் இ. தோ. கா. இயக்கத்தை ஜங்ஷனிலேயே ஆரம்பித்து வைத்தோம். இ என்பது இட்டிலியையும், தோ என்பது தோசையையும், கா என்பது காப்பியையும் குறிக்கும் என்று விளக்கப்பட்டதும், கூடியிருந்த நண்பர்கள் அனைவரும் ஏக்க சாகரத்தில் மூழ்கி, "இனிமை மிகுந்த இட்டிலி வாழ்க!" "தொன்மை மிக்க தோசை வாழ்க!" "கவலை தீர்க்கும் காப்பி வாழ்க!" என்று ஜனஸ்வரத்தில் வானைப் பிளக்கும்படி கோஷங்களை யிட்டு, மேற்படி இ. தோ. கா. இயக்கத்தை ஏகமனதாக அங்கீகரித்தார்கள். பிறகு ஆளுக்கொரு பூரி வாங்கி வேண்டா வெறுப்பாகத் தின்று தொலைத்தார்கள்!

மேற்படி இ. தோ. கா. இயக்கத்தைப் பற்றி அன்று மாலை எட்டயபுரத்தில் நடந்த ஆரம்ப ஆசிரியர் மகாநாட்டில் கல்கி பிரஸ்தாபித்துக் கொடி ஏற்று விழா நடத்தினர்! அந்த மகாநாட்டின்போது எட்டயபுரம் ஹோட்டல் சொந்தக்காரர்களும், ஹோட்டல் தொழிலாளரும் தனித் தனியாக வரவேற்புப் பத்திரம் அளித்ததற்குப் பதில் சொல்லுகையில், "ஹோட்டல் தொழில் உலகத்திலேயே இரண்டாவது மகா பெரிய தொழில்" என்று வர்த்தகப் பொருளாதார நிபுணர்கள் கண்டு பிடித்திருப்பதைக் கல்கி குறிப்பிட்டார். அப்படிப்பட்ட தொழில் தமிழ் நாட்டில் நன்றாய் வளர்ந்து பெருகி, ஹோட்டல் சொந்தக்காரர்களுக்கு அதிக லாபமும், ஹோட்டல் தொழிலாளருக்கு அதிக சம்பளமும் கிடைக்க வேண்டுமென்று சமரசமாக வாழ்த்திக் கூறினர். அவ்விதம் ஹோட்டல் தொழில் முன்னேற்றமடைவதற்கு இட்டிலிதான் ஆதாரமானது என்றும், ஆகையால் இட்டிலியின் புனருத்தாரணத்துக்காகவே அன்று காலையில் திருநெல்வேலி ஜங்ஷனில் இ. தோ. கா. இயக்கத்தை ஆரம்பித்திருப்பதாகவும் தெரிவித்தார். "எங்களுடைய பிரயாணத்தின் போது திண்டுக்கல்லிலே, மதுரையிலே, விருதுநகரிலே, மணியாச்சியிலே, திருநெல்வேலியிலே — ஒரு இடத்திலும் இட்டிலி கிடைக்கவில்லை! இட்டிலி இல்லாத தமிழ்நாடு சந்திரன் இல்லாத வானத்தைப் போலவும், கதாநாயகி இல்லாத காவியத்தைப் போலவும், தமிழ்ப்பண்ணை அண்ணாமலை இல்லாத பொதுக் கூட்டத்தைப் போலவும் சோபையற்று இருக்கிறது!......" என்று 'கல்கி' சொன்ன போது, சபையில் ஏற்பட்ட குதூகலத்தைச் சொல்லி முடியாது, போங்கள்! ஆரம்ப ஆசிரியர்கள் தங்களுக்குச் சம்பளம் குறைவாகக் கொடுக்கப்படும் அக்கிரமத்தைக்கூட அந்தச் சமயத்தில் மறந்து மிக்க ஆனந்தப்பட்டார்கள்.



ட்சோஜன் ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார் பாரதி ஞாபகார்த்த மண்டபத்தின் வாசலில் இரு புறமும் நிலைநாட்டச் சிற்ப வேலைப்பாடமைந்த இரண்டு கல் தூண்கள் தருவதற்கு இசைந்திருக்கிறார். செட்டியார் அவர்கள் குற்றாலத்திலிருந்து பிரிய மனமின்றிப் புறப்படும் சோகரஸமான கட்டம்.

இ. தோ. கா. இயக்கத்தின் அபாரமான முன்னேற்றமானது என்னைத் திருநெல்வேலியிலிருந்து நேரே எட்டயபுரம் ஆசிரியர் மகாநாட்டில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டது! எனவே சில

மணி நேரம் பின்னோக்கிச் செல்வது அவசியமாகிறது.

**மா**லை சுமார் நாலு மணிக்கு எட்டயபுரம் போய்ச் சேர்ந்தோம். அங்கே எங்களை வரவேற்பதற்கு எவ்வித ஏற்பாடும் செய்யப்படவில்லை. எட்டயபுரம் பாரதி மன்றத்து நண்பர்கள் அவ்வளவு பேரும் முதல் நாள் கல்லிடைக்குறிச்சிக்கு வந்திருந்து எங்களுடனேயே ரயில் பிரயாணம் செய்து வந்திருக்கையில் வரவேற்பு ஏற்பாடுகள் யார் செய்வார்கள்?

அதைப் பற்றி நாங்களும் அதிக கவலைப் படாமல் ஒரே கோலாகலமாகப் பாரதி மண்டபத்தை அடைந்தோம். கம்பீரமாகக் காட்சி யளித்த அந்த மண்டபத்தைப் பார்த்ததும் எங்களை யறியாமலே ஒவ்வொருவருடைய கரங்களும் சிரங்களுக்கு மேலே சென்று குவிந்தன. பக்தி உணர்ச்சி அப்படிப் பொங்கியது. "பாரதியார் 'காணி நிலம் வேண்டும்' என்றும், அதிலே 'மாளிகை கட்டித் தரவேண்டும்' என்றும் கேட்டுவிட்டுப் போனாரே; அவர் கேட்டதற்கு மேலேயே இதோ தமிழ் மக்கள் கொடுத்திருக்கிறார்களே!" என்று ஒவ்வொருவர் மனதிலும் தோன்றியது.

பாரதியார் கவிதையைப் போலவே அவரது ஞாபகார்த்தக் கட்டிடமும் அழகாயும் கம்பீரமாயும் அமைந்திருக்கிறது. ஒரு பக்கத்தில் வாசகசாலைக்கு இடம். இன்னொரு பக்கத்தில் காரியாலயத்துக்கு இடம். மத்தியில் விஸ்தாரமான ஹால். பின்புறம் பிரசங்க மேடை. (சங்கீத மேடையாகவும் உபயோகிக்கலாம்.) முன்புறத்தில் நீண்டுயர்ந்த தூண்கள். எடுப்பான முகப்பு.

கட்டிடம் அநேகமாகப் பூர்த்தியடைந்து விட்டது. பூச்சு வேலையும் மேலே கோபுரம் கட்டுவதுந்தான் பாக்கி. இந்த வேலைகளும் முடிந்து விட்டால், "ஐயா! கவியரசே! தாங்கள் தமிழ்நாட்டில் பிறக்கத் திருவுளம் கொண்டதற்குக் காணிக்கையாகத் தமிழ் மக்களாகிய நாங்கள் இதோ இந்த அழகிய மண்டபத்தைத் தங்கள் ஞாபகத்திற்குச் சமர்ப்பிக்கிறோம்!" என்று பெருமையோடு சொல்லலாம். திறப்பு விழாவும் கோலாகலமாக நடத்தலாம்.

**ம**ண்டபத்தை நாங்கள் பார்த்து அதிசயித்துக்கொண்டு வந்தபோது, ரசிகமணி அவர்கள், "கட்டிடத்துக்கு இதுவரை என்ன செலவாகி யிருக்கிறது?" என்று கேட்டார்கள். "சுமார் முப்பதாயிரம் ஆகி யிருக்கிறது" என்று கல்கி சொன்னதும், "முப்பதாயிரமா? முப்பதாயிரந்தானா? முப்பதாயிரத்துக்குள் இவ்வளவு பெரிய கட்டிடம் எப்படிக் கட்டி முடிந்தது? அதுவும் இந்தக் காலத்தில்?" என்று மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப்பட்டோம்.

"எல்லாம் இந்த ஊர் மகாராஜாவின் சிரத்தையினாலும் ஊக்கத்தினாலுந்தான். அவர்கள் சொந்த மேற்பார்வையில் வேலை நடக்கிறபடியால் இந்தத் தொகைக்குள் முடிந்திருக்கிறது. ஆனாலும் கட்டிடம் பூர்த்தியாக இன்னும் பதினையாயிரம் ரூபாய் வேண்டும் போலிருக்கிறதே? யாரைப் போய்க் கேட்பது?" என்று கல்கி கவலையுடன் கூறினார்.

"வேறு யாரைக் கேட்பது? தமிழ் மக்களைத்தான் கேட்கவேண்டும். கேட்டால் கட்டாயம் கொடுக்கிறார்கள். நமது ராஜமாணிக்கம் நம்மை வலியக் கூப்பிட்டுக் கொடுக்கவில்லையா?" என்று ரஸிகமணி டி. கே. சி. உற்சாகமாகச் சொன்னார்.

டி. கே. சி. சொன்னதற்கு ஒப்பம் வைப்பதுபோல், பாரதி மண்டபத்தைப் பார்த்துப் பரவசமடைந்த ட்ரோஜன் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள், மண்டபத்துக்குப் போகும் பாதை முகப்பில் இரு புறத்திலும் நாட்டுவதற்கு, சிற்ப வேலை யமைந்த இரண்டு கல் தூண்களைக் காணிக்கை யளிப்பதாக ஒப்புக் கொண்டார்கள்.

பிறகு எல்லாருமாக எட்டயபுரம் ஆரம்ப ஆசிரியர் மகாநாட்டுக்குச் சென்றோம்.

* * *

எட்டயபுரம் ஆரம்ப ஆசிரியர் மகாநாட்டை ட்ரோஜன் ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார் திறந்து வைத்துக் கச்சிதமான ஒரு பிரசங்கமும் செய்தார். எட்டயபுரத்துக்கு வந்து பாரதி மண்டபத்தைப் பார்த்ததினால் தம்முடைய ஆயுளில் ஐந்து வருஷம் கூடி விட்டது என்று அறிவித்து விட்டு, கல்வி மந்திரி ஸ்ரீ அவினாசிலிங்கம் செட்டியார் கல்வி முன்னேற்றத்தில் மிக்க அக்கரை யுள்ளவர் என்றும், ஆரம்ப ஆசிரியர்கள் தக்கபடி தங்கள் கோரிக்கையை எடுத்துச் சொன்னால் கட்டாயம் வெற்றி கிடைக்கும் என்றும் கூறினார்கள்.

மகாநாட்டிற்கு அக்கிராசனம் வகித்த டி. கே. சி. அவர்கள் தமது பிரசங்கத்தில் பிள்ளைகளின் 'பெற்றோன்களை' வெளுத்துக் கட்டினார்கள்! "எங்கள் பிள்ளைகளுக்கு அது வரவில்லை, இது வரவில்லை" என்று எந்தப் பெற்றோனாவது ஆசிரியர்களை வந்து தொந்தரவு செய்தால் உடனே அந்த ஆசாமியைக் கட்டிப் போட்டு, "இந்தப் பாடத்தை நீ படி! இந்தக் கணக்கை நீ போடு!" என்று சொல்ல வேண்டுமாம்! உடனே அந்தப் பெற்றோன்களுக்குப் புத்தி வந்து "எங்கள் பிள்ளைகளுக்கு வந்தது போதும்!" என்று சொல்லி விடுவார்களாம்! எப்படி யிருக்கிறது யோசனை?

பிறகு, மேற்படி ஆரம்ப ஆசிரியர் சங்கத்தின் தலைவரான டெபுடி இன்ஸ்பெக்டர் அவர்கள் உபாத்தியாயர்களுக்குச் சம்பள விஷயத்தில் பொறுமையா யிருக்கும்படி உபதேசித்தார். திருச்சி நேஷனல் ஹைஸ்கூலில் தாம் உபாத்தியாயரா யிருந்த போது "கல்கி" தம்மிடம் படித்தவர் என்பதையும் சொல்லி வைத்தார்.

ஆனால் "கல்கி"யோ குருவுக்கு மிஞ்சிய சிஷ்யராகி, உபாத்தியாயர்களைப் பார்த்து, "உங்களுடைய பொறுமையைப் பார்த்து எனக்குக் கோபம் கோபமாய் வருகிறது! பொறுமைக்கும் ஓர் எல்லை இல்லையா?" என்று கேட்டார்.

ஸ்ரீ முத்து ராமலிங்கமும் ஸ்ரீ சாமிநாதனும் காரசாரமான தீர்மானங்களைக் கொண்டு வந்து காரசாரமாகப் பேசி நிறைவேற்றினார்கள்.

முக்கியமாக எனக்கு நினைவிருக்கும் தீர்மானம், "கல்வி மந்திரி ஸ்ரீ அவினாசிலிங்கம் அவர்கள் சீக்கிரத்தில் கிருகஸ்தாசிரமத்தை மேற்கொள்ள வேண்டும்; அப்போதுதான் குடும்பஸ்தர்களின் கஷ்டங்கள் அவருக்குத் தெரியும்" என்பதுதான்!

மேற்படி யோசனை மகாநாட்டில் தீர்மானமாக நிறைவேற்றப் பட்டது, அல்லது யாருடைய பேச்சிலேயாவது சொல்லப் பட்டது என்பது நன்றாக ஞாபகமில்லை.

எப்படி யிருந்தாலும் இனிமேல் அதைப் பற்றிக் கவலையும் இல்லை. மேற்படி யோசனையை நிறைவேற்றுவதற்கு அவசியமில்லாதபடிதான் ஸ்ரீ அவினாசிலிங்கம் கல்வி மந்திரி பதவியை ராஜினாமா செய்துவிட்டாரே!

கடைசியாக, நாங்கள் வந்த காரியம் எல்லாம் முடிந்து ஊருக்குக் கிளம்பினோம். எட்டயபுரம் மகாராஜாவின் மைத்துனர் ஸ்ரீ அமிர்தசாமி அவர்கள், எட்டயபுரம் மேயர் கந்தசாமி செட்டியார் அவர்கள், எட்டயபுரம் பாரதி இலக்கிய மன்றத்தைச் சேர்ந்த மற்ற நண்பர்கள் எல்லாரும் ஒருமுகமாக "மறுபடியும் சீக்கிரம் வர வேண்டும்!" என்று சொன்னார்கள்.

"அதெல்லாம் முடியவே முடியாது; பாரதி மண்டபத் திறப்பு விழாவின் போது தான் மறுபடி வரமுடியும். அதற்கு முன்னால் வரமுடியாது!" என்று நாங்கள் கண்டிப்பாகப் பதில் சொன்னோம்.

"அப்படியானால் நீங்கள் சீக்கிரம் திரும்பி வருவது கண்டிப்பாக நிச்சயம்!" என்று நண்பர்கள் சொன்னார்கள்.

ஐயப்பன் அருளால் அவர்களுடைய வாக்குக் கண்டிப்பாகப் பலிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

கதவிடுக்கில் எட்டிப் பார்த்தேன். என்ன விந்தை! குனிந்த தலையை நிமிராமலே சாப்பிடும் வழக்கமுடையவர், அன்று தம் கண்களை நாலாபுறமும் சுழற்றிச் சுழற்றி இழந்து விட்ட எதையோ தேடும் ஆராய்ச்சியில் முனைந்திருந்தார்!

வெற்றியின் அருணோதயம் கண்டு சற்றே விம்மிதம் கொண்டது என் உள்ளம்.

அன்று மாலை நாலு மணி சுமாருக்கு, ரமணி கையில் பிரிந்த ஒரு புடவையுடன் என் அறைக்குள் ஓடி வந்தான்.

"அக்கா! அத்திம்பேர் இதை உன்னிடம் காட்டச் சொன்னார். மதனப் பள்ளியிலிருந்து வாங்கி வந்தாராம்!" என்றான் மூச்சு விடாமல்.

விந்தையிலும் விந்தை! எனக்கென்று புடவைகூட வாங்கி வந்தாரா! அட, ஜாக்கெட் கூடவா! என்ன அழகான கலர்! என்ன அற்புதமான சரிகை வேலைப்பாடமைந்த பார்டர்! பொருத்தமான கலரும், அளவான ஜாக்கெட்டும் வாங்கியிருக்கும் அவர், அவற்றை வாங்கும்போது நிச்சயமாக என் உருவைச் சிந்தனை செய்தேயிருப்பார்!

"சரி, புடவையைக் கொண்டு போய்ப் பத்திரமாக அத்திம்பேரிடம் கொடுத்து விடு, போ! போ!" என்றேன் சற்றுக் கடுமையாகவே.

ரமணியின் முகம் சுண்டி விட்டது. மேலே ஒன்றும் கேட்காமல் புடவையை மடித்துக் கொண்டு போய் விட்டான்.

மேலே சென்ற ரமணி சீக்கிரமே திரும்பி வந்தான். அவன் முகத்தில் முத்து முத்தாக வியர்வை அரும்பியிருந்தது. அவன் என் பக்கம் பாராமலே மூச்சுத் திணற அம்மாவிடம் சொன்னான் :—

"அம்மா! அத்திம்பேர் வண்டி கொண்டு வரச் சொல்லுகிறார்! மாலை ஐந்தரை மணி வண்டிக்கே அவர் ஊருக்குப் போக வேண்டுமாம்!"

அம்மா கையிலிருந்த சட்டுவத்தைப் பொத்தென்று கீழே போட்டாள். "இந்த அசட்டுப் பெண்ணோடு நான் என்ன செய்வேன்? வந்த புருஷனை என்னவென்று கூட விசாரிக்காமல் இப்படி அடம் பிடிக்கிறதே? அவருக்கு ஏன் கோபம் வராது?" என்று சொல்லிக்கொண்டே தன் தலையில் அடித்துக் கொண்டாள்.

"இதோ பார், ரமணி! உன் அத்திம்பேரிடம் போய்ச் சொல்லு: எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொண்டு புறப்பட அக்காவுக்குக் கொஞ்சம் அவகாசம் வேண்டுமாதலால், ஆறரை மணி வண்டியில் புறப்பட்டு விடலாம் என்று நான் சொன்னதாகப் போய்ச் சொல்லு!" என்று சொல்லி ரமணியை அனுப்பி விட்டுப் பின்னோடு நானும் சென்றேன்.

பெட்டியில் எல்லாவற்றையும் ஒழுங்காக எடுத்து வைத்துக் கொண்டிருந்தவர், ரமணியின் வார்த்தைகளைக் கேட்டுத் திரும்பினார்.

"என்ன! அப்படியானால் உன் அக்காவும் என்னோடு வரப்போகிறாளா?" என்றார் மிக்க வியப்புடன்.

"ஆமாம்! ஏன், நான் வருவதால் உங்கள் ஆராய்ச்சிக்கு ரொம்பவும் இடைஞ்சலாக இருக்குமோ?" என்ற சூடான கேள்வியுடன் நான் அவருக்கு முன்னால் போய் நின்றேன்.

வியப்பினால் விரிந்த தம் அழகிய விழிகளால் அவர் என் உச்சி முதல் உள்ளங்கால் வரை உற்று நோக்கினார். கோபத்தால் நிமிர்ந்து நின்ற என் சிரம் நாணத்தால் கவிழ்ந்தது.

"மணி ஆறு! வண்டி கொண்டு வரட்டுமா, அத்திம்பேரே!" என்று கீழிருந்து கத்தினான் ரமணி.

"அட, முட்டாள்! இப்போது யார் உன்னை வண்டி கொண்டுவரச் சொன்னது?" என்று மாடியில் இருந்தபடியே பதிலுக்குக் கத்தினார் இவர்!




ஆசிரியர் : விச்வம்பரநாத் கௌசிக்

மொழிபெயர்ப்பு : ரா. வீழிநாதன்

நந்தாராம் திடீரென்று தன் சிந்தனையிலிருந்து கலைந்து, "உங்கள் கால் சரியாகி விட்டதல்லவா?" என்று கேட்டான்.

"ஏன், சரியாகி விட்டதே!" என்றார் ராமநாத பாபு

நந்தாராம் மேலே ஏதோ சொல்ல வாய் எடுத்தவன் சிரமப்பட்டுத் தன்னை அடக்கிக் கொண்டான். இதைக் கவனித்த ராமநாத பாபு, 'தானும் ஜஸ்ஸோவும் பேசியதை இவன் கேட்டுவிட்டான்; அதனால்தான் இப்படிப் பேசுகிறான்!' என்று எண்ணி, "என் கால்தான் சரியாகி விட்டதே! நாளைக்கே அலகாபாத் போகலாம் என்றிருக்கிறேன்" என்றார்.

"புஜுவாகூட இனி பயமில்லை என்று சொல்லிவிட்டான். நீங்கள் நாளைக்கே போய்விடலாம்!" என்றான் நந்தாராம்.

எப்பொழுதும் இனிமையாகவும் மரியாதையாகவும் பேசுகிற நந்தாராம் இப்படிப் பேசியது ராமநாத பாபுவுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ஆகையால் அவர் மேலே ஒன்றும் பேசாமல் விட்டுவிட்டார்.

இரவு படுக்கைக்குப் போன நந்தாராமின் உள்ளத்தில் கிளர்ச்சி மூண்டது. ராமநாத பாபுவும் யசோதராவும் பேசியதை அவன் ஆதியோடு அந்தமாகக் கேட்டிருந்தான்.

அவன் படுக்கையில் உட்கார்ந்த வண்ணம் சிந்திக்கலானான்:

இனி என் வாழ்க்கை அமைதியுடன் கழியும் என்றல்லவா எண்ணியிருந்தேன்! ஆனால் உண்மையில் இனித்தானே நான் செய்த பாவங்களுக்குப் பிராயச்சித்தம் தொடங்கப் போகிறது! கடவுளே! உனக்கு இன்னுமா திருப்தி ஏற்படவில்லை? என்னுடைய உள்ளத்து ஒளியான ஸோனுவைப் பிடுங்கிக் கொண்டு விட்டாய். என்னைப் பிச்சைக்காரனாக்கித் தெருத் தெருவாக அலையவிட்டாய். இவ்வளவு செய்த பிறகும் கூடவா உனக்கு என்மீது இரக்கம் வரவில்லை? நான் செய்த பாவம் அவ்வளவு பெரியதா, என்ன? இன்னும் அதன் பிராயச்சித்தம் முடிந்தபாடில்லையா?

இப்படி எண்ணும்பொழுதே அவனது கண்களில் நீர் சுரந்தது. கண்ணீரைத் துடைத்துக் கொண்டு தனக்குத்தானே கூறிக் கொள்ளலானான்:

எங்கள் காதல் காரணமாக ஸோனுவின் தந்தை அனுபவித்தாரே, அதுபோன்ற கஷ்டங்களை நானும் ஜஸ்ஸோவின் காரணமாக அனுபவிக்க வேண்டும்போல் அல்லவா தோன்றுகிறது! ஆனால் அப்படியெல்லாம் விஷயத்தை முற்றவிடக் கூடாது. என் விஷயமும் ஸோனுவின் விஷயமும் வேறு. நாங்கள் இருவரும் ஒரே சாதிக்காரர்கள். ஒன்றாக வளர்ந்தவர்கள், விளையாடினவர்கள். நான் அவளைக் காதலிக்கவோ, மணம் புரிந்து கொள்ளவோ எனக்கு உரிமை இருந்தது. ஆனால் இந்த 'கத்ரி' சாதிப் பையனுக்கு அந்த உரிமை ஏது? இது வீண் ஆசை, தப்பான முயற்சி! நான் இதை எதிர்த்தே தீருவேன். இவன் நல்ல எண்ணத்துடனும் உதார குணத்

துடனும்தான் உபசாரம் செய்தான் என்று எண்ணி ஏமாந்தே போனேனே! இப்பொழுதல்லவா புரிகிறது, இவனுடைய கெட்ட எண்ணங்கள் எல்லாம். எனக்கு இது முன்னமேயே தெரிந்திருந்தால் பட்டினி கிடந்துகூட மரித்திருப்பேன்; இந்த நீசன் வீட்டில் தஞ்சம் புகுந்தே இருக்கமாட்டேன். எவ்வளவு நாட்களாக இவனும் ஜஸ்னோவும் இப்படி.....சே! ராமநாத பாபு அவ்வளவு மோசமாக நடந்து கொள்வாரா? ஜஸ்னோவும் ரொம்ப நல்லவள் ஆயிற்றே! தவறான வழியில் இருவரும் போய் இருக்கவே மாட்டார்கள். ஆனால் உண்மையை எப்படித் தெரிந்து கொள்வது?—என் மூளை குழம்புகிறதே! கடவுளே! இப்படி என்னைச் சோதிக்காதே; ஏன் என்னிடம் இவ்வளவு கோபம்? இன்னுமா சோதனை? மன்னித்து விடு, ஈசா!" என்று முணு முணுத்தவாறு சந்தராம் அழலானான்.

அதே சமயம் அறைக்குள் யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டது. கண்களைத் துடைத்துக் கொண்டு சரியாக உட்கார்ந்து கொண்டான் சந்தராம். கையில் பாலுடன் உள்ளே நுழைந்த யசோதாரா, "இன்னும் தூங்கவில்லையா, அப்பா?" என்று கேட்டாள்.

சந்தராம் யசோதாராவைப் பரிக்ஷிக்க எண்ணி, "இல்லை, அம்மா! நாளைக்கு ராமநாத பாபு ஊருக்குப் போகப் போகிறாரே, உனக்குத் தெரியுமா?" என்று கேட்டுவிட்டு அவளுடைய முகபாவத்தைக் கவனிக்கலானான்.

"நாளைக்கேயா? ஏன் இவ்வளவு சீக்கிரம்?" என்று பரபரப்புடனும் வருத்தத்துடனும் விசாரித்தாள் யசோதாரா.

"கால் சரியாகி விட்டது. இனிமேல் அவருக்கு இங்கே என்ன வேலை?"

யசோதாரா இதற்கு ஒன்றும் பதில் அளிக்காமல் போய் விட்டாள். சந்தராம் பல்லைக் கடித்துக் கொண்டு, "இவளுக்கு ஏன் இவ்வளவு அக்கறை! ஏதோ விஷயமிருக்கிறது இல்லாவிட்டால் ......சரி, போகப் போகப் பார்ப்போம்!" என்று மனத்துள் எண்ணிக் கொண்டு தூங்கும் முயற்சியில் ஈடுபட்டான்.

* * *

மறுநாள் காலையில் ஜமீன்தார், ஜமீன்தாரிணி முதலியவர்கள் இரண்டு நாட்கள் கழித்துப் போகுமாறு எவ்வளவோ சொல்லியும் கேட்காமல் பிடிவாதமாக விடை பெற்றுக்கொண்டு ஸ்டேஷனுக்குப் புறப்



புட்டு விட்டார் ராமநாத பாபு. அவரை வண்டி ஏற்றி விடுவதற்காக நந்தராமும் அவருடன் சென்றான்.

நந்தராமிடம் ஏற்பட்டிருந்த மன மாறுதலை நன்கு உணர்ந்திருந்த ராமநாத பாபு, அவனுடைய உள்ளத்தில் ஏதாவது தப்பெண்ணம் உதித்திருந்தால் அதை அகற்றி விடவேண்டுமென எண்ணி, "நந்து, நேற்று முதல் நீ ஒருமாதிரியாக இருக்கிறாயே, ஏன்?" என்று கேட்டார்.

"அதெல்லாம் ஒன்று மில்லையே!" என்றான் நந்தராம்.

"என்னிடம் ஒளிக்காதே, நந்து! நேற்று முதல் நீ என்னிடம் ஒருவிதமாக நடந்து கொள்கிறாய். இதுவரை நீ இப்படி நடந்து கொண்டதே இல்லை. என்னிடம் ஏதாவது குற்றம் தென்பட்டால் ஒளிக்காமல் சொல்லு!" என்றார் ராமநாத பாபு.

நந்தராம் யோசனையில் ஆழ்ந்தான். ஜன்னோவையும் ராமநாத பாபுவையும் பற்றிய சகல விஷயங்களையும் அவன் தெரிந்துகொண்டு விட வேண்டுமென விரும்பினான். ஆனால் அதைப் பற்றி ராமநாத பாபுவிடமே கேட்க அவனுக்குத் துணிவு ஏற்படவில்லை. ராமநாதபாபு எவ்வித சங்கோசமுமின்றிச் சொன்ன வார்த்தைகள், அவரைப் பற்றித் தப்பான அபிப்பிராயம் கொள்ள இடம் கொடுக்கவே இல்லை. அவன் என்ன சொல்வது என்று புரியாமல் தயங்கினான். அவனுடைய நிலைமையைக் கண்ட ராமநாதபாபு, "இதோ பார், நந்தராம்! மனதில் உள்ளதை நல்லதோ கெட்டதோ, தெளிவாகச் சொல்லிச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதுதான் நல்லது. நீ என்மீது தப்பபிப்பிராயம் கொண்டிருந்தால் அதைப் போக்குவது என் கடமை. நான் எதையும் தப்பாக எடுத்துக் கொள்ள மாட்டேன். என்னை நம்பி உன் மனதில் உள்ளதை ஒளிக்காமல் சொல்லு!" என்றார்.

ராமநாத பாபுவின் வார்த்தைகளைக் கேட்ட நந்தராமின் உள்ளம் உருகி விட்டது. அவன் ராமநாத பாபுவின் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக்கொண்டு, "எசமான், நான் உங்களிடம் ஒன்றையும் ஒளிக்க மாட்டேன். எல்லாவற்றையும் ஒளிக்காமல் என்றைக்காவது ஒரு நாள் கட்டாயம் சொல்கிறேன்" என்றான்.

"இல்லை; இன்றைக்கே, இப்பொழுதே சொல். உனக்குச் சங்கோசமாயிருந்தால் வண்டியிலிருந்து இறங்கி விடு. பேசிக் கொண்டே நாம் இருவரும் ஸ்டேஷனுக்கு நடந்தே போவோம்" என்று கூறி ராமநாத பாபு அவனுடைய பதிலை எதிர்பார்க்காமலே வண்டியை நிறுத்தச் சொல்லி இறங்கி விட்டார். நந்தராமும் அவருக்குப் பின்னால் இறங்கியவாறே, "வண்டிக்கு நேரமாய் விடப் போகிறதே!" என்றான்.

"அதெல்லாம் வேண்டிய நேரமிருக்கிறது. நீ கவலைப்படாதே, வா! அந்த மாந்தோப்பில் போய்த் தனிமையில் பேசுவோம்" என்று கூறி ராமநாதபாபு நந்தராமை மாந்தோப்புக்குள் அழைத்துச் சென்றார். ஒரு மரத்தடியில் இருவரும் உட்கார்ந்தனர்.

"நீங்களும் ஜன்னோவும் தனிமையில் பேசிக்கொண்டிருந்ததை நேற்றுக் கேட்டேன். அது முதல்......" என்று ஆரம்பித்தான் நந்தராம்.

ராமநாதபாபு அவனை இடை மறித்து, "இதுதான் காரணமாயிருக்கும் என்று நான் அப்பொழுதே நினைத்தேன். நாங்கள் இருவரும் ஒருவரை யொருவர் மனமாரக் காதலிக்கிறோம் என்பது உண்மையே. ஆனால் இன்றுவரை நெருங்கிப் பழகிய எங்களுடைய நடத்தையில் எவனும் குற்றம் கற்பிக்க முடியாது என்று நான் உறுதி கூறுகிறேன். நீ நம்பினால் நம்பு; நம்பா விட்டால் போ! உண்மையைச் சொல்லி விட்டேன்" என்றார்.

இதைக் கேட்ட நந்தராம் தழுதழுத்த குரலில், "உங்களிடம் அகாரணமாக என்னுள்ளத்தில் அவநம்பிக்கை ஏற்பட்டதற்கு வருந்துகிறேன். நீங்கள் எதற்காகப் பொய் சொல்லப் போகிறீர்கள்? உங்களைப் பற்றி என்னென்னவோ கெட்ட அபிப்பிராயம் கொண்டேனே, நான் மகா பாவி! என்னை மன்னித்தருளுங்கள்!" என்று வேண்டிக் கொண்டான்.

"நந்தராம், மன்னிப்பு எதற்கு? இந்த மாதிரி நிலைமையில் நீ எண்ணியதைப் போலவேதான் யாருமே எண்ணுவார்கள். இது சகஜம். உன்மீது குற்றமே இல்லை. ஒன்றையும் ஒளிக்காமல் பகிரங்கமாகச் சொன்னாயே, அதுவரையில் எனக்குச் சந்தோஷம். சரி, ஸ்டேஷனுக்குப் புறப்படுவோமா?" என்று கேட்டவாறே ராமநாத பாபு எழுந்து வண்டியை நோக்கி மௌனமாக நடந்தார். நந்தராமும் கவலை தோய்ந்த முகத்துடன் அவர் பின்னாலேயே சென்று வண்டியில் ஏறிக்கொண்டான்.

வண்டி புறப்பட்டது. சுந்தராமின் முகத்தில் கவலை சூழ்ந்திருப்பதைக் கண்ட ராமநாதபாபு, "சுந்தராம், என் முகம் வாட்டமா யிருக்கிறது?" என்று கேட்டார்.

சுந்தராம் ஒரு பெருமூச்சு விட்டு, "எசமான், இந்த உலகத்தில் எனக்குச் சுகமே கிட்டாது என்று தோன்றுகிறது. எனக்குப் பிறந்தது முதல் ஒரு கணமும் நிம்மதியே கிடையாது. வீட்டுக்கு வந்த பின்பாவது நிம்மதி ஏற்படும் என்று நினைத்தேன். ஆனால் நிம்மதி கிட்டியபாடில்லை. கவலைதான் அதிகரித் திருக்கிறது!" என்றான்.

"ஏன்?"

"ஏன் என்று கேட்கிறீர்கள்? நான் உயிருக்கு உயிராய் வளர்த்த பெண் மன நிம்மதி இழந்து கவலையால் வாடும்பொழுது எனக்கு எப்படி நிம்மதி கிட்டும்?"

சுந்தராமின் வார்த்தைகளின் கருத்தை உணர்ந்த ராமநாதபாபு, "நீ என்ன செய்ய முடியும், அப்பா?" என்றார்.

"அதனால்தான் எனக்கு நிம்மதியே கிடையாது என்கிறேன்" என்று கூறினான் சுந்தராம்.

அதற்குள் வண்டி ஸ்டேஷன் போய்ச் சேர்ந்தது. ராமநாதபாபு டிக்கட் வாங்கிக் கொண்டு சுந்தராமுடன் பிளாட்பாரத்தை அடைந்தார். ரயிலும் வந்து நின்றது. ராமநாதபாபு ரயிலில் ஏறி உட்கார்ந்த பின்னர், "போய் வருகிறேன், சுந்து! என்னைப் பற்றி உனக்கு வித்தியாசமான எண்ணம் ஒன்றுமில்லையே!" என்று கேட்டார்.

"நன்றாய்ச் சொன்னீர்கள்! உங்கள் மீது என்ன குற்றம்? எல்லாம் என் விதி விளைத்த வினைதான். என்னை மறந்து விடாதீர்கள். நான் ஏதாவது குற்றங் குறைகள் செய்திருந்தாலும் மன்னித்து முன் போலவே என்னிடம் அன்பாக இருங்கள். என் உயிர் போனாலும் சரி, ஜஸ்வோவுக்குச் சுகம் தரும் விஷயத்தில் எவ்விதமான குறையும் வைக்கமாட்டேன். இது மட்டும் நிச்சயம். சரி, போய் வாருங்கள். ஞாபகமிருக்கட்டும்" என்று கூறி சுந்தராம் விடை பெற்றுக் கொண்டான். ராமநாத பாபுவும் கண்களில் நீர் ததும்ப அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

## 21

கிறிஸ்துமஸ் விடுமுறைக்குத் தமது சொந்த ஊராகிய கான்பூருக்குச் சென்ற

### புத்தி வரவில்லை!



கணவன்:—நேற்று 'கிருஷ்ணன் தூது' நாடகம் பார்த்துவிட்டு வந்தாயே எப்படி இருந்தது?

மனைவி:—அதுவா! நான் குழந்தையா யிருந்தபோது ஒருதரம் பார்த்திருக்கிறேன். அந்தக் கட்டேலேபோற துரியோதனன் அப்படியேதான் இருக்கிறான். இவ்வளவு நாளாகியும் கொஞ்சங் கூட அவனுக்குப் புத்தி வந்தபாடில்லை!

ராமநாதபாபுவுக்குத் தம்முடைய கல்யாண விஷயமாகப் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கிறது என்ற விஷயம் சம்பாவதியின் மூலமாகத் தெரிய வந்தது.

அன்று சாப்பிடும் பொழுது அவருடைய தந்தை, "ராமு, உனக்குக் கல்யாணம் செய்துவிடலாம் என்று எண்ணிக் காசியில் உள்ள ஜகதீசப் பிரஸாத் என்பவருடன் பேச்சு வார்த்தை நடத்திக்கொண்டிருக்கிறேன். பெண் அழகா யிருப்பாளாம். நன்றாகப் படித்தும் இருக்கிறாளாம்!" என்றார்.

"அதற்கு இப்பொழுது என்ன அவசரம், அப்பா? படிப்பு முடிந்த பின்னால் செய்து கொண்டால் போகிறது!' என்றார் ராமநாத பாபு.

"படிப்புக்கும் கல்யாணத்திற்கும் என்ன சம்பந்தம்? அதெல்லாம் நீ 'பாஸ்' செய்துவிடுவாய்!"

"இப்பொழுதே கல்யாணம் செய்து கொள்ள எனக்கு இஷ்டமில்லை."

"உன் இஷ்டம் என்ன? வருகிறவர்கள் எல்லாம் 'பையனுக்கு இந்த வருஷம் கல்யாணம் செய்யவில்லையா?' என்று கேட்கிறார்கள். இந்த வருஷம் செய்துவிட வேண்டும் என்று நான் தீர்மானித்து விட்டேன். எல்லாம் காலாகாலத்தில் ஆக வேண்டும் அல்லவா?" என்றார்.

ராமநாத பாபுவுக்கு என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை. மறுநாள் தம் தகப்பனாரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு லக்னோவிலிருக்கும் விராஜகிசோரைப் பார்க்கப் புறப்பட்டார்.

* * *

"ராமநாத், அபூர்வமா யிருக்கிறதே! என்ன விசேஷம்? வா! வீட்டை விட்டு ஓடி வந்து விட்டாயா, என்ன!" என்று புன்முறுவலுடன் கேட்டவாறு ராமநாதபாபுவை வரவேற்றார் விராஜகிசோர்.

ராமநாதபாபு சிரித்துக் கொண்டே, "இன்னும் உன் பரிகாசம் போன பாட்டைக் காணோமே!......அதிருக்கட்டும். உன்னை ஒன்று கேட்க வந்தேன்" என்று ஆரம்பித்தார்.

"என்ன?"

"அப்பா எனக்குக் கல்யாணம் நிச்சயம் செய்திருக்கிறார்......"

"பேஷ்! தேதி வைத்தாகி விட்டதா?"

"அதெல்லாம் இல்லையப்பா! நான் ஜஸ்ஸோவைக் காதலிக்கிறேன் என்பது தான் உனக்குத் தெரியுமே! நான் அவளைத்தான்......"

"நடக்காத காரியத்தைப் பற்றிப் பேசி என்ன பயன்? சாதி விட்டுச் சாதி கல்யாணம் செய்ய உங்கள் குடும்பத்திலும் சரி, அவளுடைய குடும்பத்திலும் சரி, ஒருவருமே சம்மதிக்க மாட்டார்கள். அப்படி இருக்கும்பொழுது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போல ஆசைப்பட்டு என்ன பிரயோஜனம்? பேசாமல் உன் அப்பா பார்த்திருக்கும் பெண்ணையே கல்யாணம் செய்து கொண்டுவிடு. அது தான் நல்லது!" என்றார் விராஜகிசோர்.

"விஷயம் தெரியாமல் பேசுகிறாயே! ஜஸ்ஸோ என்னைக் கல்யாணம் செய்து கொள்வதை நந்துகூட விரும்புவான்போலிருக்கிறது!"

"நந்து விரும்பினால் மட்டும் ஆகிவிடுமா? அவன் அப்பா அம்மா உயிருடன் இருக்கிற வரையில் இது நடக்காத காரியம்!"

"ஏதோ உன்னை ஆலோசனை கேட்போம் என்று வந்தால் இப்படிப் பேசுகிறாயே! என்ன, போ!" என்று அலுத்துக் கொண்டார் ராமநாத பாபு.

"நான் வேறு என்ன சொல்வது? நந்துவைப் போல ஜஸ்ஸோவை இழுத்துக் கொண்டு ஓடிப்போய் வாழ உனக்கு அவ்வளவு தைரியம் கிடையாது. தைரியமிருந்து அழைத்துக்கொண்டு நீ வந்துவிட்டால் என்னாலான உதவியைச் செய்ய நான் என்றும் சித்தமா யிருக்கிறேன்!" என்றார் விராஜகிசோர்.

"அது கிடக்கட்டும், அப்பா! ஒன்று செய்தால் என்ன? நந்துவின் சம்மதத்தைச் சரியாய்த் தெரிந்துகொண்டு, வேறு யாருக்குமே தெரியாமல் ரகசியமாகக் கல்யாணம் செய்துகொண்டு விட்டால் அப்புறம் யார் என்ன சொல்லக் கிடக்கிறது?"

"திருட்டுத் தாலி கட்டிவிடலாம் என்று நினைக்கிறாயா? அதற்கு அவன் சம்மதிக்க வேண்டாமா? அப்படி அவன் சம்மதித்தாலும் அது தெரிந்த பிறகு வாழ்க்கையில் எத்தனையோ கஷ்டங்களுக்கு உள்ளாக வேண்டி வருமே! எல்லாவற்றையும் இப்பொழுதே யோசித்துக் கொள்!"

"நான் எதற்கும் தயார்!"

"அட, அவ்வளவு துணிச்சல் உனக்கு வந்து விட்டதா!"

"அதிருக்கட்டும், அப்பா! நான் சொல்வதைக் கேள். நீ எனக்காக நந்தாவிடம் போய்க் கேட்டுப் பார், என்ன?"

"என்னையா சொல்கிறாய்? அதை யெல்லாம் என் தலையில் கட்டாதே! அதற்கு வேறு யாராவது பார்!"

"என்ன, விராஜகிசோர்! உன்னைத் தவிர எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? நீ போய்த்தான் ஆகவேண்டும்."

"எனக்கு இதெல்லாம் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. இருந்தாலும் உனக்காகப் போய் வருகிறேன். ஆமாம், என்றைக்குப் போவது?"

"என்றைக்கு உனக்குச் சௌகரியமோ, அன்றைக்குப் போ! இதெல்லாம் கொஞ்சம் சீக்கிரம் தெரிந்தால் நல்லது. எல்லாம் ரகசியமா யிருக்க வேண்டும். தெரிந்ததா?"

"அதுகூட எனக்குத் தெரியாதா? ஆனால் எந்தச் சாக்கை வைத்துக்கொண்டு அங்கே போவது?"

"வேட்டையாடப் போகிறவன் போல் போய்ச் சேரு! அதுதான் நல்லது. நான் வேண்டுமானால் ஒரு கடிதம் எழுதித் தருகிறேன்."

"சரி, நீ ஒரு கடிதம் எழுதிக் கொடு. நாளைக்கே நான் போய் வந்துவிடுகிறேன்!" என்று கூறி எழுந்தார் விராஜகிசோர்.

(தொடரும்)

## இப்பொழுது மீண்டும் கிடைக்கும்!

### பெயர்போன

# 'ஆடு மார்க்' துணிகள்




பங்களூர் மில்ஸ் துணிகளெல்லாம் இப் பெயர்போன 'ஆடு மார்க்' குடையவைதான் — அவையின் உயர் குணத்திற்கும், உழைப்புத் தன்மைக்கும், சிறந்த பெறுமதிக்கும் இதுவே உங்கள் உத்தரவாதம். சென்ற ஆறு ஆண்டுகளுக்கிடையே நாங்கள் இந்தியாவின் யுத்த முயற்சி காரியங்களில் இரவு பகல் ஓயாமல் முனைந்து வந்துள்ளோம். நீங்களும் போதிய துணிமணிகள் கிடைக்காமல் தவிக்க நேர்ந்தது. ஆனால் இப்பொழுது 'ஆடு மார்க்' ஸூட்டிங்குகளும் ஷர்ட்டிங்குகளும் இதர துணி தினுசுகளும் மீண்டும் வழங்கக் கிடைக்கும். அவை உங்களுக் களிப்பதாவன :—

**உயர் ரகம்**

'ஆடு மார்க்' பருத்தி துணிகள் மிக நேர்த்தியான பருத்தியிலிருந்து அபூர்வத் திறமையுடன், இந்தியாவின் சீதோஷ்ண நிலைமைக் குகந்தாற் போல் நெசவு செய்யப் படுபவை.

**உழைப்புத் தன்மை**

இந்தத் துணிகள் நீடித்துழைக்கும். எவ்வளவு முரடாகச் சலவை செய்யப்பட்டபோதிலும் எளிதில் நாசமுமாகா.

**பெறுமதி**

'ஆடு மார்க்' துணிகளின் விலைகள் அவையின் குணத்திற்கும், உழைப்பிற்குமேற்றவை, நியாயமானவைதான். இத் துணிகள் உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமதியே யென நாங்கள் உத்தரவாத மளிக்கிறோம்.

'ஜென்னா' ஷர்ட்டிங்குகள் ★ லாங்கிளாத் ★ கோர்ட் லிட்டான் டரிட் ஷர்ட்டிங்குகள் ★ வேடி லாங்கிளாத் ★ சாயம் தோய்த்த லாங்கிளாத் ★ டங்கோரிகள் ★ ஸாம்ரா ஸூட்டிங்குகள்.

**யுத்தகால வேலை விவரம்**

யுத்தத்திற்கிடையே பங்களூர் மில்ஸ் சர்க்காருக்கு ஸப்ளை செய்துள்ள பருத்திச் சரக்குகளின் விவரம் கீழ்வருமாறு:

| | | |
|---|---|---|
| பாரசூட் பருத்தி நூல் கயிறுகள் | 1,08,142 | ராத்தல் |
| காக்கி ட்ரில் | 2,01,49,000 | கஜம் |
| ஜங்கில் க்ரீன் ஷர்ட்டிங் | 2,87,47,534 | .. |
| பாரசூட் துணி — உணவு ஸப்ளைகள் இறக்கிவிட | 1,03,00,000 | .. |
| விமானிகளுக்குள்ள ஷர்ட்டிங்கும், மற்ற துணிகளும் | 1,20,45,439 | .. |

**உங்களுக்கு துணிகள் கிடைக்காமலிருந்ததன் காரணம் இதிலிருந்து விளங்கும்!**

தயாரிப்போர்கள் :

## தி பங்களூர் மில்ஸ்

### தி பங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ், கோ., லிட்., பங்களூர் ஸிடி

ஏஜண்டுகள், காரியதரிசிகள் ட்ரெஷரர்கள்

### பின்னி & கோ, (சென்னை) லிட்

'ஆடு மார்க்' உடுப்பதற்கு யோக்கியமான துணிகளின் அறிகுறி

# இரு கடிதங்கள்

கு.ரா.

என் தங்கை மைதிலியையும், உமா மகேசுவரனையும் தனிக் குடித்தனம் வைத்துச் சுமார் ஒரு வருடமாகப் போகிறது. சென்ற தீபாவளியன்று பழைய தகராறுகள் தீர்ந்து உமா மைதிலியை அழைத்துக் கொண்டு போனான்.

அதன் பிறகு அடிக்கடி அவர்களிடமிருந்து கடிதம் வந்து கொண்டிருந்தது. அந்நியோன்னியமாகவும், சௌக்கியமாகவும் இருப்பதாகவே கடிதங்கள் தெரிவித்தன.

இந்தத் தீபாவளிக்கு அவர்களை வரவழைத்து ஏதாவது செய்ய வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்த சமயத்தில், என் பெயருக்கு இரண்டு கடிதங்கள் வந்தன. விலாசத்திலிருந்த கையெழுத்து எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. மைதிலியும், உமாவும் தனித் தனியே கடிதம் எழுதியிருந்தார்கள்!

விஷயம் ஏதோ இருக்க வேண்டுமென்று அவற்றை அவசர அவசரமாகப் பிரித்துப் பார்த்தேன். நான் நினைத்தபடியே அவர்களுக்குள் தகராறு ஏற்பட்டிருந்தது. மைதிலி, "என்னை உடனே அழைத்துச் சென்று விடு!" என்று எழுதியிருந்தாள். உமா, "உன் தங்கையை உடனே அழைத்துப் போ!" என்று கோடிட்டு எழுதியிருந்தான்.

"இது என்ன விபரீதம்!" என்று எண்ணியவாறு, கடிதங்களை மற்றுமொரு முறை படித்தேன்.

மைதிலி எழுதியிருந்தாள்:

"அண்ணா

இவர் உண்மையிலேயே மனம் மாறி, என்னை ஏற்றுக் கொண்டு விட்டார், இனி நமக்கு வாழ்க்கையில் துன்பம் என்பது இல்லை என்று மனம் பூரித்திருந்தேன். என்னுடைய நம்பிக்கையில் இவ்வளவு சீக்கிரமாக மண் விழும் என்று நான் நினைக்கவேயில்லை.

நான்கு நாட்களுக்கு முன் அவர் ஆபீசுக்குப் போயிருந்தபோது இது தெரிந்தது. அவருடைய பெட்டியை மறந்து பூட்டாமல் சென்றிருந்தார். நான் வேடிக்கையாக 'அதில் என்ன இருக்கிறது. பார்க்கலாம்' என்று திறந்தேன்.

பெட்டியை முழுவதும் கிளறிப் பார்த்த பிறகு, 'ஏன் பார்த்தோம்' என்று மனம் நொந்து கொள்ளும்படியாகிவிட்டது. அந்த வெட்கக்கேட்டை எப்படி அண்ணா எழுதுவேன்?.........எனக்குப் போட்டியாக இன்னொரு பெண்ணின் படம் அவருடைய பெட்டியில் இருந்தது! அவளால்தான் இவருக்கு என்னைக் கண்டால் பிடிக்கவில்லை என்பது தெரிந்த பிறகு நான் என்ன செய்வது?...அவரை ஏதாவது கேட்கலாம் என்று பார்த்தால் நான்கு நாட்களாக—அதாவது நான் அந்தப் படத்தைப் பார்த்த நாளிலிருந்து—ஒரு மாதிரியாக இருக்கிறார். ஒரு வேளை நான் அவளுடைய படத்தைப் பார்த்தது தெரிந்து விட்டதோ என்னமோ!

என்னால் இனி ஒரு க்ஷணம் கூடப் பொறுக்க முடியாது. நான் இங்கிருப்பதால் அவருக்கும் தடையாக இருக்கிறது. எனக்கும் நிம்மதியில்லை. ஆகையால் நீ இக் கடிதம் கண்டதும் வந்து ஏதாவது காரணம் கூறி என்னை அழைத்துச் சென்று விடு! பகவான் அடுத்த ஜன்மத்திலாவது எனக்கு நல்ல வாழ்க்கையைக் கொடுக்கட்டும்.

உன் அருமை மைதிலி."

உமா எழுதியிருந்தான்:

"கோபால்!

வாழ்க்கையில் நான் இதை விடப் பெரிய தவறு செய்திருக்க முடியாது. 'பெண்களை நம்பாதே!' என்று சொல்வது பொய்யல்ல என்று இப்பொழுதல்லவா தெரிகிறது? ஆயினும் மைதிலி இப்படித் துரோகம் செய்வாள் என்று நான் கனவிலும் எண்ணவேயில்லை. இப்பொழுது கூட அதை நம்புவது கடினமாகத்தான் இருக்கிறது.

விஷயம் இதுதான். உன் தங்கையின் பெட்டியில் நான்கு நாட்களுக்கு முன் ஒரு புருஷனின் புகைப்படத்தைப் பார்த்தேன். அதைப் பார்த்ததிலிருந்து நான் மன அமைதியை இழந்துவிட்டேன். அவள் இருதயத்தில் இன்னொரு புருஷனுக்கு இடமிருப்பதை அறிந்த பிறகு எனக்கு இருப்பே கொள்ளவில்லை.

அவளிடம் விசாரிக்கலாமென்று பார்த்தேன். நான்கு நாட்களாக ஒரு

மாதிரியாக இருக்கிறான். ஒருவேளை அவன் குட்டு வெளியாகி விட்டதைத் தெரிந்து கொண்டாளோ, என்னமோ!

இக்கடிதம் கண்டவுடன் நீ வந்து உன் தங்கையை அழைத்துப் போய் விடு! நான் நிம்மதியாகத் தேசாந்திரம் போய் விடுகிறேன். எனக்கு வேறு வழி தோன்றவில்லை.

உமா.''



கடிதங்களை நான்கைந்து முறை படித்த பிறகு எனக்குச் சிறிது நம்பிக்கை உண்டாயிற்று. இருவர் மனதிலும் சந்தேகப்பேய் நுழைந்து விடவே, நேர விசாரிப்பதற்குச் சந்தர்ப்பம் இல்லாமல் போய்விட்டது. ஆகையினால் நேரே போனால் சமாதானம் செய்து வைக்கலாம் என்று நம்பிக்கையுடன் தீபாவளிக்கு வேண்டிய ஜவுளிகளுடனும், மற்ற பொருள்களுடனும் ஊருக்குப் புறப்பட்டேன்.

நான் போன சமயம் உமா ஆபீசுக்குப் போயிருந்தான். என்னைக் கண்டதும் மைதிலி, ''அண்ணா!'' என்று நீர் மல்கும் கண்களுடன் என் கரங்களைப் பிடித்துக் கொண்டாள்.

''மைதிலி! ஏது, நீ கூடவா இப்படி அவசரப்படுவது? நீ புத்திசாலி என்று எண்ணியிருந்தேனே!......அழாதே!'' என்று உள்ளே அழைத்துச் சென்றேன்.

சிரமபரிகாரம் செய்து கொண்ட பிறகு, ''அந்தப் படத்தைக் கொண்டு வா!'' என்றேன்.

''அது என்னிடம் இல்லையே! அன்று பார்த்ததுதான்!'' என்றாள்.

''அட பைத்தியமே! அதுதான் அவசரப்பட்டு விட்டாய். நன்றாக ஆர்ந்து பார்த்திருந்தால் உண்மை தெரிந்திருக்கும். எதற்கும் அவன் சாயந்திரம் வந்தால் தெரிந்து போகிறது!'' என்று சமாதானப் படுத்தினேன்.

பிறகு அவளுக்குத் தெரியாமல் அவன் பெட்டியிலிருந்த 'புருஷனின் படத்'தை எடுத்துப் பார்த்தேன். என் மனதிலிருந்த பாதி பாரம் இறங்கிவிட்டது.

சாயந்திரம் உமாவை அழைத்துக் கொண்டு வெளியே சென்றேன். 'பார்க்'இல் உட்கார்ந்திருந்தபோது, நான் எடுத்துப் போயிருந்த 'புருஷனின் பட'த்தை அவன் கையில் கொடுத்து, ''நன்றாகப் பார்த்து விட்டு, உன் முடிவு சரிதானா என்று சொல்'' என்றேன்.

அவன் சற்று நேரம் அதை உற்று நோக்கிக் கொண்டிருந்தான். ''எனக்கு ஒன்றும் தெரியவில்லையே!'' என்றான் கடைசியில்.

''உமா! அந்தப் படத்திலிருப்பது மைதிலி என்று தெரியவில்லையா? அம்மான் கோலத்தின்போது நீ மைதிலியைப் பார்க்கவில்லையா?'' என்று கேட்டேன்.

''அப்பொழுதுதான் நான் கோபத்தில் தலையைத் தூக்கவேயில்லையே! எப்படிப் பார்த்திருக்க முடியும்?'' என்று சொல்லி உமா தலை குனிந்தான்.

இரவு மைதிலியிடம் 'அந்தப் பெண்ணின் பட'த்தைக் கொடுத்துக் கவனித்துப் பார்க்கச் சொன்னேன்.

அவளுக்குப் புரியவில்லை. துக்கம் தான் வந்தது. வெகு நேரம் அவளை அழ விடாமல், ''நம்ப அடுத்தாத்துச் சந்துருவைக் கூடவா உனக்குத் தெரியவில்லை! அவன் நாடகங்களில் பெண் வேஷம் போடும் விஷயம்தான் உனக்குத் தெரியுமே? முகத்தில் வேறு எழுதி ஒட்டியிருக்கிறதே!'' என்றேன்.

கண்களைத் துடைத்துக் கொண்டே மைதிலி 'களுக்'கென்று சிரித்தாள். உமாவும் அவளுடன் சேர்ந்து சிரித்தான். சந்தேகம் தீர்ந்தது. அப்புறம் தீபாவளி கொண்டாட்டமாக நடந்தது என்று சொல்லவா வேண்டும்?

# காலக்ஷேபம்

## அவன் கேள்வி !

டாக்டர் (நோயாளியிடம் பிரிஸ்கிருப்ஷனைக் கொடுத்து):—இதை மூன்று நாளைக்குச் சாப்பிடு; சுகமாய் விடும்.

நோயாளி (கிராமத்து ஆசாமி):—என்னங்க, இந்தத் துண்டுக் காகிதத்தை மூன்று நாளைக்கு நான் என்னமா சாப்பிடுகிறதுங்க?

—ஜி. ஜே. மானுவேலன்.



## மூன்று ரகம் !

நண்பர்:—இது என்ன செட்டியாரே! எதற்காக அளப்பதற்கு மூன்று படிகள் வைத்திருக்கிறீர்கள்?

கடைக்காரர்:—ஒரு படி வாங்கறதுக்குங்க; இன்னொரு படி கொடுக்கிறதுக்குங்க! மூன்றாவது படி நம்ம சொந்த உபயோகத்துக்குச் சாமான்களை அளக்கிறதுக்குங்க!

—என். வி. துரைசுவாமி.



## படிக்கத் தெரியாது !

"என்ன ஸார், கவலையாயிருக்கேள்?"

"ஒன்றுமில்லை, ஸார்! என்னுடைய நாய் காணாமற் போய்விட்டது!"

"பேப்பரில் விளம்பரம் செய்யுங்களேன்!"

"என்னுடைய நாய்க்குப் படிக்கத் தெரியாதே!"

—எஸ். வேணு.



## ஆச்சரியம் !

பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டிருந்த சிறுவன் தன் தகப்பனை நோக்கி, "அப்பா, இந்தப் பஸ் படத்துக்குப் பக்கத்தில் ஆச்சரியக் குறி ஏன் போட்டிருக்கிறது?" என்று கேட்டான்.

"இங்கே பஸ் நிற்பது என்பது ரொம்பவும் ஆச்சரியமான விஷயம் என்பதைக் குறிக்கத்தான்!"

கே. வி. ஆர்.



## கிடையாது !

குடியிருப்பதற்காக வந்தவர் (வீட்டை ஒரு முறை பார்த்துவிட்டுச் சொந்தக்காரரைப் பார்த்து):—வீட்டில் என்ன ஸார், நாற்றம் அடிக்கிறது? ஒருவேளை சாக்கடை அடைத்துக் கொண்டிருக்கிறதோ?

சொந்தக்காரர்:—இருக்காது! இந்த வீட்டிற்குச் சாக்கடையே கிடையாதே!

—என். என்.

## தெரியவில்லை !

பஸ் நிற்குமிடத்தில் இரண்டே பிரயாணிகள் நின்றுகொண்டிருந்தனர். ஒரு காலி பஸ் வந்து நின்றது. இருவரும் ஒருவரை ஒருவர் தாக்கித் தள்ளி வண்டிக்குள் ஏறினர்.

கண்டக்டர்:—என்னய்யா, வண்டிதான் காலியாயிருக்குதே. எதுக்கய்யா இப்படி அவசரப்பட்டு என்மேலே விழுறீங்க?

பிரயாணிகளில் ஒருவர்:—முன்டி அடிச்சு விழுந்து ஏறியே பழக்கமாயிடுத்தப்பா? நிதானமா ஏறத் தெரியலே!

—எஸ். டி. எல். நாக.



## இன்னும் மோசம் !

வாங்க வந்தவர்:—ஏனப்பா, முருங்கைக்காய் ஒரு கட்டு என்ன விலை?

விற்பவன்:—நாலணாவுங்க!

வாங்க வந்தவர்:—எல்லாம் ஓரேயடியாய் முத்திப்போய் விறகு மாதிரி இருக்கிறது. நாலணா என்கிறாயே!

விற்பவன்:—விறகு மாதிரி இருக்கிறதினாலே தானுங்க நாலணா! —எம். எஸ். துரைசாமி.



## நல்ல யோசனை

ஆபிஸில் தூங்கிவழிந்த குமாஸ்தா குப்புராவைக் கண்ட மானேஜர், "என்ன ஓய்! இப்படித் தூங்குகிறீரே?" என்று கேட்டார்.

குப்புராவ்:—மன்னிக்கணும்! குழந்தை நேற்று என் இராத் தூக்கத்தைக் கெடுத்து விட்டது; அதனால்தான் இங்கே சற்றுத் தூங்க நேர்ந்தது.

மானேஜர்:—அப்படியானால் நாளை முதல் அந்தக் குழந்தையையும் ஆபீசுக்கு அழைத்து வந்துவிடுங்கள்! —கே. ஆர். சுவாமி.

# கோபதாபம்

மாலு

பொழுது விடிந்தால் தீபாவளி. ஏதோ கோபத்தில் சொன்னதற்காக அம்மாவுக்குப் பரிந்து கொண்டு மீனுவை ஊருக்கு அனுப்பிவிட்டான் காசிநாதன். நாளடைவில் காசிநாதனின் மனக் கஷ்டத்தை அறிந்து அவனது தாயார் மீனுவை அழைத்து வர ஊருக்குச் சென்றிருந்தாள். ஒவ்வொரு கணமும் தன் தாயையும் மனைவி மீனுவையும் ஆவலுடன் எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருந்தான் காசிநாதன்.

★

என்னதான் தன் தாயின்மீது அன்பிருந்தாலுங்கூட மீனுவை அவள் ஏதாவது சொல்லிவிட்டால் காசிநாதனுக்குப் பிரமாதமான கோபம் வந்துவிடும். துக்கம், கவலை இன்னதென்றே தெரியாமல் இயற்கையாகக் காட்டில் வளர்ந்து படர்ந்து கிடக்கும் கொடி போல வளர்ந்திருந்தாள் மீனு. வெள்ளரிப் பிஞ்சுபோல் தளதள வென்று வளர்ந்திருந்த அவளது மேனியிலே ஏதோ ஒரு சக்தி இருந்தது. அவள் நடையிலே ஒரு துள்ளல்; பார்வையிலே ஒரு கவர்ச்சி!

“மெள்ள நடந்து போடி! பூமி அதிரும்படி நடக்காதே!” என்பாள் காசிநாதனின் தாயார்.

மீனு குபீரென்று சிரித்துவிடுவாள்.

“என்னடி இது, பொம்மனாட்டி இப்படி எங்கேயாவது சிரிக்கிறது உண்டோ?” என்று வெடுக்கென்று கேட்டு விடுவாள் அவள்.

இப்படியே மீனுவின் ஒவ்வொரு அங்க அசைவிலும் ஏதாவது குற்றங் கண்டு பிடிப்பது காசிநாதனின் தாயாருடைய வேலை; எடுத்ததற்கெல்லாம் அவளைக் கேலி செய்வது மீனுவின் வேலை!

இவ்வாறு மன ஒற்றுமையில்லாமலே இருவரும் நெடு நாள் இருந்து வந்தார்கள். காசிநாதனின் அனுதாபமெல்லாம் மீனுவின் பக்கம்தான் இருந்து வந்தது. ஆனாலும் வெளிக்குத் தன் தாயின் பக்கமாகவே பேசுவதுபோல் பாசாங்கு செய்து வந்தான் காசிநாதன்.

அன்று வெள்ளிக்கிழமை. ஏதோ எண்ணி மீனு மனச்சோர்வுடன் உட்கார்ந்திருந்தாள்.

“வெள்ளிக்கிழமையும் அதுவுமாக ஒரு சுமங்கலி இப்படி முகத்தைத் தூக்கிக் கொண்டிருந்தால் குடித்தனம் என்னத்திற்காகும்?” என்று கேட்டாள் காசிநாதனின் தாயார்.

“உங்கள் குடித்தனம் எக்கேடு கெட்டால் எனக்கு என்ன!” என்று எரிந்து விழுந்தாள் மீனு.

“எல்லாம் அவன் கொடுக்கிற இடம். நேற்று வந்தவளெல்லாம் என் குடித்தனத்தைப் பற்றி இப்படிச் சொல்லும்படியாகி விட்டது!” என்று வருத்தப்பட்டாள் காசிநாதனின் தாயார்.

இந்தச் சமயத்தில், “அம்மா!” என்று கூப்பிட்டுக் கொண்டே அங்கு வந்தான் காசிநாதன். தன் தாயாரின் சோகம் ததும்பும் முகத்தைப் பார்த்ததும் அவனுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

“மீனு! அம்மாவை என்ன சொன்னாய்? ஏன் இப்படி இருவரும் இடிந்து போய் உட்கார்ந்திருக்கிறீர்கள்?” என்று கேட்டான்.

“உங்கள் அம்மாவை யாரும் ஒன்றும் சொல்லவில்லை. பொழுது விடிந்து பொழுது போனால் உங்கள் அம்மாவின் தொல்லைதான் எனக்குப் பெரிய தொல்லையாகி விட்டது!” என்று மீனு அங்கலாய்த்தாள்.

அம்மாவின் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தான் காசிநாதன்.

“நீயும் உன் மனைவியும் சௌகரியமாயிருங்கள்; நான் எங்கேயாவது போகிறேன்!” என்று சொல்லி அழ ஆரம்பித்து விட்டாள் அவள்.

காசிநாதனுக்கு ஒன்றுமே புரியவில்லை. இந்தப் பக்கம் பார்த்தால் பத்து மாதம் தன்னைச் சுமந்து பெற்ற தாயார்; அந்தப் பக்கம் பார்த்தால் அருமை மனைவி! யாரை நொந்து கொள்வது?

“மீனு! இப்படியெல்லாம் சதா சண்டை போட்டுக் கொண்டிருப்பதாயிருந்தால் நீ பேசாமல் பிறந்தகம் போய் விட வேண்டியதுதான்!” என்றான்.

"அதற்கென்ன நானேக்கே கொண்டு போய் விட்டுவிடுங்களேன்! இங்கே இருக்க யாருக்கு ஆசையிருக்கிறது!" என்றாள் மீனு ஆத்திரத்தில்.

★

**ஊ**ருக்குத் திரும்பும்போது மீனு தன்னைப் பார்த்த பார்வையானது காசிநாதனின் உள்ளத்தை என்னவெல்லாமோ செய்தது. தான் ஏதோ பெரிய தவறு செய்துவிட்டுத் திரும்புவதாகவே அவன் நினைத்தான். எங்கு நோக்கினும் மீனுவின் அன்பு நிறைந்த முகம் தோன்றி அவன் மனதை அரித்தது.

காசிநாதனின் தாயாருக்கும் இப்பொழுதெல்லாம் வீட்டில் இருப்பே கொள்வதில்லை. அவளுக்கு வீடே வெறிச்சென்றிருப்பது போலிருந்தது. வெளியில் யாராவது புருஷனும் மனைவியுமாகப் போவதைப்பார்த்து விட்டால் அவளுடைய மனம் படாதபாடு பட்டுவிடும். உள்ளே ஓடோடியும் வந்து தன் மகனைப் பரிதாபத்துடன் பார்ப்பாள். வாசலில் பூக்காரன் வந்து, "அம்மா, பூ வாங்கவில்லையா?" என்று கேட்பான். "வேண்டாம், அப்பா!" என்று சொல்லும்போது அவளுடைய கண்களில் அவளையும் அறியாமல் கண்ணீர் கசிந்து விடும்.

தீபாவளி நெருங்க நெருங்க அவளுடைய வருத்தம் அளவு கடந்து போயிற்று. நல்ல நாளும் அதுவுமாய்க் குழந்தைகள் இரண்டும் பிரிந்திருக்க வேண்டாமென்று நினைத்தாள். ஆகவே, அவள் அன்று தன் மனதைத் திடப்படுத்திக் கொண்டு, "நாளைக்கு ஊருக்குப் போய் மீனுவை அழைத்துக் கொண்டு வரலாம் என்றிருக்கிறேன். தீபாவளியும் அதுவுமாய் அவள் இல்லாமலிருப்பதால் வீடு வெறிச் சென்றிருக்கிறது!" என்றாள்.

"உங்கள் இஷ்டம்; நீங்கள் எப்படி வேண்டுமானாலும் செய்யுங்கள்!" என்று சமர்த்தாகப் பதிலளித்தான் காசிநாதன்.

தாயற்ற மீனுவிடம் ஒரு வாரம் வரை அவன் தந்தையும் அன்னையும் அன்பாக இருந்தார்கள். போகப் போக அவர்கள் அவளை லட்சியம் செய்வதில்லை. தன் தாயார் இருந்திருந்தால், தான் இப்படி நாதியற்றவள் போல் இந்த வீட்டில் இருக்க வேண்டியிராதே என்று நினைத்துப் பார்த்த மீனுவின் உள்ளம், அடுத்த கணமே காசிநாதனின் தாயாரைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்து விட்டது.

அவர் தன் தாயாரிடம் வைத்திருக்கும் அன்பு தவறில்லை என்றும், தான்தான் தவறு செய்து விட்டோம் என்றும் நினைத்து அவள் ஏங்க ஆரம்பித்து விட்டாள்.

திடீரென்று அன்று காலையில் காசிநாதனின் தாயார் தன்னை அழைத்துக் கொண்டு போக வந்ததும் மீனுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. "மாமி! என்னை மன்னித்து விடுங்கள்" என்று கண்ணீரும் கம்பலையுமாய் அவள் நமஸ்கரித்தாள். காசிநாதனின் தாயாரும் நடந்தவற்றையெல்லாம் மறந்து, அவளை அன்புடன் அணைத்துக் கொண்டாள்.

★

**வ**ண்டிச் சத்தத்தைக் கேட்டதும் வாசலுக்கு ஓடி வந்தான் காசிநாதன். வண்டியை விட்டு இறங்கிய மீனு தன் கணவனை விழுங்கி விடுபவள் போல் பார்த்தாள். காதலர்கள் இருவரும் கண்களின் மூலம் தங்கள் கருத்தைத் தெரிவித்துக் கொண்டனர்.

தீபாவளியன்று காலை கங்காஸ்நானம் செய்துவிட்டுப் புத்தம் புது ஆடைகளை அணிந்து கொண்டு வந்து தன்னை நமஸ்கரித்த மகனையும் மருமகளையும் மனமார வாயார வாழ்த்தினாள் காசிநாதனின் தாயார். அவர்கள் மூவருடைய உள்ளமும் ஒன்று பட்டதற்கு அறிகுறியாகத் தெருவில் பட்டாசுக்கட்டு பட பட வென்று வெடித்தது!






இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

எச். ஜே. பாஸ்டர் & கோ., லிட். பம்பாய், கல்கத்தா, மதராஸ், லாகூர்

குழந்தைகள் பராமரிப்பைப் பற்றிய சிறிய புத்தகம் 4 அணாவுக்கு ஸ்டாம்புகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். உங்கள் பெயரையும் விலாசத்தையும் எச். ஜே. பாஸ்டர் & கோ. லிட்., த. பெ. 202, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

---

# 'ஆஸ்ப்ரோ'
## இதோ வந்துவிட்டது!




**போலிகளை வாங்காதீர்கள்.** ஒவ்வொரு வில்லையின்மேலும் 'ஆஸ்ப்ரோ' என்ற வார்த்தை இருப்பதைக் கவனிக்கவும் 'ஆஸ்ப்ரோ' வலியையும் ஜுரத்தையும் 10 நிமிஷங்களில் போக்கும். இருதயத்துக்காவது வயிற்றுக்காவது கெடுதி செய்யாது



**'ஆஸ்ப்ரோ'**
**கட்டுப்பாடு செய்யப்பட்ட விலைகள் :**

3 வில்லைகள் கொண்ட பாக்கட் . . . 1 அணா
30 வில்லைகள் கொண்ட பாக்கட் . . . 10 அணா

விநியோகஸ்தர்கள் :

9/10, ஸெகண்ட் லேன் பீச், மதராஸ்
தபால் பெட்டி நெ. 1370, டெலிபோன் நெ. 4458

**'ஆஸ்ப்ரோ'**
**எங்கும் கிடைக்கும்.**

# கைவிடப்பட்ட





# தருவாயிலும் நம்பிக்கை

சளி குரல்கட்டி வியாதி முற்றிபோன நிலைமையிலும் எண்ணற்ற குழந்தைகள் ஜம்மியின் லிவர்க்யூர் "லாம்பின் லேட்" மருந்தினால் பிழைத்திருக்கின்றனவென்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இந்த வியாதியினால் ஏற்படும் சிசுக்களின் மரணத்தை மிகவும் குறைத்தது ஜம்மி லிவர்க்யூர் முக்கிய காரணம் என்பது பிரபல வைத்தியர்களின் அபிப்பிராயம்.

ஆகையினால் கவலையில்லாமல் சேர்த்து எடுத்துக்கொண்டு, குழந்தைகளுக்கு சளி குரல்கட்டி வியாதி ஏற்படாமல் இருக்கப் பிரயத்தனம் செய்யவும்.

ஜம்மியின் லிவர்க்யூர் 'லிம்பின்', குழந்தை சளி குரல் சம்பந்தமான உபாதைகளை சொஸ்தம் செய்து, சிசுக்களுக்கு டானிக்காகவும், பசி, ஜீரணசக்தி விருத்தி செய்தும், மலச்சிக்கலைப்போக்கியும், சளி, குரலை சரியானபடி வேலை செய்ய உதவுகிறது.

கர்ப்பஸ்திரீகளுக்கு ஜம்மியின் டானிக் கர்ப்பத்திலிருந்த குழந்தைகளுக்கு ஏற்படும் கருப்புகளில் சளி, குரல் நாம்புகள் ஏற்படுகிறது என்ற ஆயுர்வேத சித்தாந்தத்தை சரியே அனுசரித்து கர்ப்பஸ்திரீகளுக்கென்று தயார் செய்த ஜம்மியின் டானிக்கை, முன்னால் சளி குரல்கட்டி வியாதியினால் பீடிக்கப்பட்ட குழந்தைகளின் தாய்மார்கள் உபயோகிக்கலாம்.

## ஜம்மியின் லிவர்க்யூர்

குழந்தையின், சளி குரல்கட்டிக்கு ஜம்மியின் லிவர் க்யூர் உபயோகியுங்கள். எல்லா இடங்களிலும் விற்கப்படுகின்றன.

விவரங்களுக்கு:

ஜம்மி வெங்கட்ரமணய்யா & ஸன்ஸ்

லிவர்க்யூர் க்ளினிக் & ஆபீஸ்:

மயிலாப்பூர் :: மதராஸ்

அல்லது

பெரிய தெரு, கும்பகோணம்

அல்லது

தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி

அல்லது

ஆற்காடு ஸ்ரீனிவாசாச்சாரி தெரு, பெங்களூர் ஸிடி

அல்லது

பம்பாய் ஆபீஸ்:

பரேக் மான்ஷன், ஸாண்டர்ஸ்ட் ரோடு வெஸ்ட், பம்பாய் - 4

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

## வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




வெள்ளரிக்காய், இஞ்சு, பாவக்காய், கீரைத்தண்டு, வாழைத் தண்டு, கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு — சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது — முதலியவை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஞாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர் உடம்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு சைஸ்களில் கிடைக்கும்.

●

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். & கோ.,

வாஸனை திரவிய வியாபாரிகள்
கும்பகோணம்

மதராஸ் ஸிடி ஏஜண்டுகள் :

மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

கோயமுத்தூருக்கும் பாலக்காடுக்கும்
சோல் ஏஜண்டு :

B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்



நேர் வகிடானாலும் சரி, கோணல் வகிடானாலும் சரி, வாரி எடுத்து இளம்பிறை வடிவாகக் கட்டினாலும் சரி—கூந்தலை எவ்விதமாக ஜோடித்த போதிலும், தலை நிறைந்த கூந்தலில்லாமல், இச்சிங்காரக் கட்டுகளெல்லாம் சோபிக்க மாட்டா. ஆகையால் கேசவர்த்தினியைக் கொண்டு கூந்தலையும் கூந்தலழகையும் இப்போதே பெருக்கிக் கொள்ளுங்கள். தலையை வித விதமாய் அலங்கரித்துக் கொள்ளுங்கள்.

அழகு என்பது உடன் பிறந்ததே. ஆனால் கூந்தலழகோ சுபாவமாக அமையாவிடினும், கேசவர்த்தினியால் கிட்டுவதே.

கவனக் குறைவாலோ அல்லது வேறு காரணத்தாலோ இழந்த கூந்தலுக்குப் பதில் இளங் கூந்தலைப் பெறுங்கள். சிறு வயது முதல் கேசவர்த்தினியை உபயோகிப்பதால், கூந்தல் ஆரோக்யத்தையும் அழகையும் தவறாமல் ஒருங்கே அடையுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

## விலை அணா 12.

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும் போலிகளை வாங்கி மோசம் போகாதீர்கள் "கேசவர்த்தினி, தென்னிந்திய ரஸாயனசாலை" என்ற பெயர்களைக் கவனித்து வாங்குங்கள்.

தயாரிப்பவர் :

## தென் இந்திய ரஸாயனசாலை,
ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்

REGD. No. M. 4392



ஓடி கொலோன் "நான்கு பருவங்கள்"......என்னே அதன் குளுமை—என்னே நறுமணம்! ஸ்பரிசமாத்திரத்திலேயே நாள் முழுதும் நீடிக்கும் புதுமையளிக்கிறது. டால்க்......நம்புவதற்கரிய மிருதுத்துவமும், நேர்த்தியிலும் நேர்த்தியான தன்மையுடன் தேகத்தை மழுப்பித்து சீராட்டுகிறது!



Coty

"நான்கு" பருவங்கள்

ஓ - டி - கொலோன்
&
டால்க்

ஏஜன்ட்கள்

டி. ஏ. டேய்லர் & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்,
100, அரமனைக்காரத் தெரு, ஜி. டி., மதராஸ்.

CT. 4/1